# தமிழ்ப் பூம்பொழில்.







கவிஞர்

பெரி. இலக்குமணச் செட்டியார்.

சிவமயம்.

மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர்

டாக்டர்

மு. வரதராசனார் அவர்கள் M. A., M. O. L, Ph. D.,

## வழங்கிய வாழ்த்துப்பா.

நற்றமிழ்ச்சீர் விளங்கும்வகைக் கவிதை பாடி
நாள்தோறும் மகிழ்ச்சியிலே திளைத்து நிற்கும்

பெற்றியுடன் தொண்டார்வம் திறமும் மிக்கோன்
பெரிஇலக்கு மணனென்னும் பெயர்சால் நல்லோன்

சொற்றிறத்தால் புனைந்துள்ள பாக்கள் எல்லாம்
சேர்ந்துதமிழ்ப் பூம்பொழிலாய்த் திகழக் கண்டோம்

வெற்றியுற இந்நூல்தான் வாழி நாளும்
விறுபெறக் கவிதைபுனை உள்ளம் வாழி.

மதுரை
25—7—72

மு. வரதராசன்.

# அகவுரை.

வெ. சு. அழகப்பன், எம். ஓ. எல்,
*(தமிழ் விரிவுரையாளர், அழகப்பா கல்லூரி, காரைக்குடி.)*



கடவுளும் கவிதையும் நிலைத்த பண்பின. பொன்னும் பொருளும் மறையும் இயல்பின. பிரமன் படைப்பிலும் கவிஞன் படைப்பு அழியாதவை என்றார் குமரகுருபரர். "மலரவன்செய் வெற்றுடம்பு மாய்வனபோல் மாயா புகழ்கொண்டு மற்றிவர் செய்யும் உடம்பு" என்பர். ஆதலின் கவிதையும் கவிஞனும் காலம் வென்றவர். அதேசமயம் காலக் கண்ணாடியுமாவர். ஓசையும் கற்பனையும் கவிதையின் கண்கள். அதன் உயிரோ, காலம்கடந்து நிலைத்திருக்கும் ஆற்றல் உடைமையேயாம். இந் நூற் கவிதைகள் உயிரொளி சிறந்தன.

கவிஞர்களை முத்திறமாகப் பிரிக்கலாம். 1. இருப் பதைக் கூறுபவர்கள். 2. உள்ளன இல்லன மொழி பவர்கள். 3. எதிர்காலத்தில் வர இருப்பதைக் கூறு பவர்கள். இவருள் மூன்றாமவரே தலையாய கவிஞர். இப் பண்புகள் இந்நூலாசிரியரிடம் உள. இவர் கவிதைகள் காகிதக் கப்பல் அல்ல. கவிழாத கனகமணிக் கலம் என்க.

கவிஞர் இலக்குமணச் செட்டியார் இந்நூலை மூன்று பகுதியாகப் பிரித்துள்ளார். முதற் பகுதி "போற்றித் தமிழ் மலர்". இதன்கண், கடவுளர், சிறு தெய்வங்கள், அயல்நாட்டில் கோவில்கொண்ட தமிழகக் கடவுளர் பாடுபொருளாயினர். இவண், கவிஞரது ஊர்த்தெய்வம் மருங்குள்ள ஊர்த்தெய்வங்கள் துதிப்பாடல் பெற்றனர். கிராமிய நறுமண வாடை வீசப்பார்க்கிறோம். இதில் 80 பாடல்கள் உள.

இந்நூலின் இரண்டாவது பகுதி "வாழ்த்துத் தமிழ் மலர்" இதில் வள்ளல்கள், தொழில் அதிபர், புலவர்கள், அறிஞர், மடாதிபதியர், இசைஞர், சமய வாதிகள், கவிஞரின் இனிய நண்பர்கள், நிறுவனங்கள் இப்படி வாழ்த்துப்பெறுகின்றனர். இவ்வகையில் 139 பாடலைக் காணலாம்.

மூன்றும் பகுதி "பல்சுவைத் தமிழ்மலர்". இதில் 26 பாடல்கள் உள. இவை பல்வேறு சூழலில் பாடியவை. இதன்கண் நாடக - இசைப்பாடல்களை இசைத்து மகிழலாம்.

இந்நூலில் இசைப்பாடல்கள், பண்ணின்பெயருடன் இருக்கக் காணலாம். இது தேவார அமைப்பை நினைவூட்டவில்லையா? பாடல்களைப் பாடிய சூழலை விரித்துரைப்பது பயன்நிறை குறிப்பாம். செய்யுள் யாப்பைக் கவிஞரே விளக்கி எழுதியிருக்கிறார். இதுவே செய்யுட் கோவை நூல்களை நினைப்பிக்கின்றது. ஆசிரியரின் தமிழ்ப்பற்றும், நாட்டுப்பற்றும் அகத்துறை அறிவும், தமிழ் மரபு தெரி விரகும்கண்டு களிகொள்ளத்தக்கன. படக்காட்சி இசையமைப்பையும் கேட்கிறோம். காந்தி அண்ணா இவர்களைப்பற்றிய பாடல்கள் நம்மை ஈர்க்காமல் போகா. விழாக்கள், இதழ்கள் பற்றிய பாடலையும் பார்க்கிறோம். இதனால் அறிவது யாது? இவ்வாசிரியர் எப்பொருள்பற்றியும் எந்தப்பாவிலும் எளிதாகப்பாடும் வல்லமை உள்ள வளமார் கவிஞர் என்பதே.

245 பாடல்களில் 124 வெண்பா, 20 கட்டளைக் கலித்துறை உள. ஏனைய 101 பாடல்கள் விருத்தம், கண்ணிகள் என்பன. 60% பாடல்கள் மக்கள்பற்றிய வாழ்த்தே. பண்பும் பயனும் ஆற்றலும் மிக்கவர்களை வாழ்த்தி வணங்குவது இக்கவிஞரின் தனிக்கோள்.

[கட்டளைக் கலித்துறை]

உண்ணு விணைந்துரை இந்நூ லுரிமை
உவந்துபெற்ருேர்

பண்ணுர் பணைவளன் சூழ்தேவ கோட்டைப்
பழம்பதிவாழ்

தண்ணுர் மதுரத் தமிழ்க்கொடை வள்ளல்
தனதனைநேர்

அண்ணு மலைஇவர் என்பா ருலகோர்
அகமகிழ்ந்தே.

இவ்வெண்ணிக்கையின் மிகுதிக்கு, இதுவே காரணமாம். இந்நூல், பிற்காலத்தே வரலாற்றுக் குறிப்புக்களை வழங்கும் ஏடாக இலங்கும்.

ஆன்ற புலமையும், ஆற்றலும், தூய நெஞ்சும் தோலா தமிழ்ப் பணிபுரியும் விரதமும்மிக்க மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் மு. வரதராசன் அவர்களின் வாழ்த்துக் கவிதை, பிறை நுதலில் இட்ட திலகம்போல் திகழ்கின்றது.

தெள்ளுதமிழ் ஆர்வமும் அள்ளிக்கொடுக்கும் கரமும், மாறுச்சொல்லும், மாசில்லா வாழ்வும், இன் சொல்லும், இனிதோம்பும் பண்பு கொண்டவரும் கல்லூரி கண்டவருமான தேவகோட்டை சேவு. அண• அண்ணாமலைச் செட்டியார் அவர்கள் இந்நூலுக்கான செலவு முழுதும் ஏற்றுக்கொண்டதுடன் வெளிக் கொணர்வதில் பேர்ஆர்வம் காட்டினர். ஆதரவு நல்கினர். இவ்விரு பெரியார்க்கும் நன்றியும் வணக்கமும் உரிய.

*(நேரிசை வெண்பா)*

உலகமிசைவாழியவே ஓங்குதமிழ்ப் பாக்கள்
திலகமெனத் தோன்றிடுவான் செய்யும்—புலமைமிகு
காவளன்கொள் வேலூர்க் கவிஞன் இலக்குமணன்
பாவளன்கள் நாளும் படைத்து.

அன்பன்,

30—7—72
காரைக்குடி.

**வெ. சு. அழகப்பன்**

உ சிவமயம்.

ஸ்ரீஜெயங்கொண்ட சோளீசர் துணை.

# அணிந்துரை.

## திரு, சேவு. அண. அண்ணாமலைச் செட்டியார் அவர்கள், பி. காம். தேவகோட்டை.

---

வேகுப்பட்டி கவிஞர் திரு பெரி. இலக்குமணச் செட்டியார் அவர்கள் இயற்றிய "தமிழ்ப் பூம்பொழில்" என்னும் இந்நூலுக்கு அணிந்துரை எழுதுவதில் மிகவும் மகிழ்கிறேன்.

கவிஞர் அவர்கள் இயற்றிய 'உலகியல் நூலறிவுப் பாடல்கள்' என்ற நூல்தான் முதலில் என்பார்வைக்கு வந்தது. அந்நூலின் சில பகுதிகளை வாசித்ததும் ஒரு பிறவிக் கவிஞரின் ஒப்புயர்வற்ற கவிதைகளை வாசிக்கும் இன்பம் உண்டாயிற்று.

கவிஞர் அவர்களை மேலைச்சிவபுரி கணேசர் செந்தமிழ்க் கல்லூரியில் நேரில் பார்க்கும் வாய்ப்புக் கிட்டியது. அதன்பின் அவருடைய கவிதை நயங்களை அறியும் பல வாய்ப்புகள் உண்டாயின. "தமிழ்ப்பூம் பொழில்" என்ற கவிதை நூலும் இச் சமயந்தான் என் பார்வைக்கு வந்தது.

"தமிழ்ப்பூம் பொழில்"என்ற இந்நூலில் உள்ள சில கவிதைகளை ஆழ்ந்து வாசித்துப் பெரிதும் இன்புற்றேன்.

"... ... ஐங்கரனைப் போற்றியவன் பொற்பாதம்
ஏற்றுதுமெம் சென்னி இணைத்து"

என்ற கணபதி வணக்கத்துடன் நூல் தொடங்குகிறது. பிறகு தடையேது? கவிதைகள் அருவிபோல் நல்மணி

களுடன் ஓடோடி வந்து நமக்கு இன்பந் தருகின்றன.

"நலந்திகழ் செந்நெல் நவமணி கொழிக்கும்
நறியதண் பர்மிய நாட்டில்"

என்று பர்மிய நாட்டின் சிறப்பை இவர் பாடும்போது அந்நாட்டின் வளம் நம் கண்முன்னே நிற்கிறது.

"மைந்தனைத் தழுவி யெடுத்தாரா?
மகிழ்ந்து முத்தம் கொடுத்தாரா?
பைந்தமிழ் நாட்டு லக்ஷ்மண கவிஞன்
பாட்டமு தூட்டி வளர்த்தாரா?

என்று அர்ச்சுனனைப்பார்த்து அல்லிகேட்கும் கேள்வியில் குடும்பப் பாசம், கடமை ஆகியவற்றோடு கவிஞருக்குத் தன்பாட்டில் உள்ள தன்நம்பிக்கையும் தெரிகிறதல்லவா?

"... ... ... ... வாழியவே
ஏறு விடையூரும் எம்மான் திருவருளால்
பேறு பதினாறும் பெற்று"

என்ற கவிஞர் வாழ்த்து, நம் உள்ளத்தில் ஆழ்ந்து பதிகிறது.

கவிஞர் புகழ் மேலும் மேலும் ஓங்கி வளர எல்லாம் வல்ல இறைவன் அருள்புரிவாராக.

அன்பன்,

தேவகோட்டை
28—7—72

உ. ராம. மெ. சுப. சேவு. அண.
அண்ணாமலை செட்டியார்

உ
சிவமயம்.

*சைவ சித்தாந்தச் செல்வரும் செந்தமிழ் அன்பரும் ஆகிய*

தேவகோட்டை

அண்ணுமலே கலேக் கல்லூரியின் தலேவர்,

**உ. ராம. மெ. சுப. சேவு. அண.**

**அண்ணுமலேச் செட்டியார் B. Com, அவர்கட்கு**

*இந்நூல் உரிமையாக்கப்பெறுகிறது.*

# உரிமையுரை.

——

*[ஆறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்]*

உலகமெனும் நிலமகளின் உருவமுழு மதிமுகக்கண்
ஒளிர்பொன் வண்ணத்
திலகமெனப் பொலிவுறுபூம் புரிதேவ கோட்டைவளர்
சிறப்பார் செல்வர்
அலகிலிருந் தமிழ்க்கடலின் ஆழத்தை அளந்துணர்ந்த
ஆன்ற அண்ணல்
இலகுமொழி ஆங்கிலத்தின் இயைபுமிகும் பட்டங்கள்
இனிது பெற்ருேர். 1

சித்தாந்த சைவநெறி மணங்கமழச் சிவம்பேணும்
சீர்மை யாளர்
சத்தார்ந்த வரலாற்றுத் தமிழ்நூல்கள் வரஉதவுந்
தகைமை யாளர்
முத்தார்ந்த நகையொளிரும் முளரிமல ரெழின்முகப்
பொன்முறுவ லாளர்
வித்தாந்தம் வேதாந்தம் இனேயபல கலேபயின்ற
விபுதர் ஆவார் 2

[நேரிசை வெண்பா]

கூர்மைத் தமிழ்ப்பூம் பொழிலிற் குலவுமண
நேர்மை மலர்களின நீர்மையின்—சீர்மை
துலக்குமிநூல் ஆசிரியர் தொன்மைக் கவிஞர்
இலக்குமணன் என்பார் இவர்.

இத்தகைய சிறப்பமைந்த இறைஅண்ணு மலைப்பெயர்
டிலங்கும் ஞான [கொண்

வித்தகர்பொற் சிவகாமி மனைமக்கள் புடை.சூழ
வீற்றிருக்கும்

உத்தமர்க்கிப் புகழான்மிக்குயர் தமிழ்ப்பூம் பொழில்நூலை
உரிமையாக் கிச்

சித்தமகிழ் வுறஎனது வாழ்த்திணைெடும் வழங்குதுஞ்சீர்
திகழ்வான் நன்றே. 3

வேகுப்பட்டி
13-12-1971

பெரி. இலக்குமணன்.

சிவமயம்.

## இந்நூலாசிரியர் வரலாறு.

# வேகுப்பட்டி ஊராட்சிமன்றத் தலைவரும் தமிழ் அறிஞரும் ஆகிய உயர்திரு A. V. இராமநாதன் M. A. அவர்கள்.

இந்நூலாசிரியர் திரு கவிஞர் பெரி, இலக்குமணச் செட்டியார் அவர்கள், திருச்சிராப்பள்ளி மாவட்டம் திருமயம் தாலுக்கா பொன்னமராவதிக் கீழ வட்டத்தில் உள்ள வேகுப்பட்டியில் 27—9—1901-ஆம் நாள் உயர்திரு லெ. பெரி. பெரியகருப்பஞ் செட்டியார் அவர்களுக்குப் புத்திரனாகப் பிறந்தார்கள். அக்கால மரபிற்கேற்ற முறையில் உள்ளூரிலுள்ள திண்ணைப் பள்ளியில் சேர்ந்து ஏட்டுச்சுவடிப் பாடங்களையும் எண் சுவடி முதலியவைகளையும் மூதுரை அம்பிகை மாலை என்ற ஏட்டுச் சுவடிச் செய்யுட் பாடங்களையும் சோர் வில்லாமல் படித்து 1910-ஆம் ஆண்டில் பர்மா நாட்டுக்கு உறவினர்களால் அழைத்துச் செல்லப்பெற்று அங் குள்ள நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் கொடுக்கல் வாங்கல் கடைகளில் சேர்க்கப் பெற்றுப் பயிற்சிபெற்று வந்தார்கள். விளையும் பயிர் முளையிலே தெரியும் என்ற தற்கேற்ப ஐந்து வயதிலிருந்தே தெருக்கூத்து நாட கங்களில் பிரியம் ஏற்பட்டதால் அதில் கவனம் செலுத் திய நிலையில் இசைப் பாடல்களை இராகம் தாளம் விடா மல் பாடும் சக்தி ஏற்பட்டதோடு 1911-ஆம் ஆண்டி லிருந்து தானே இசைப் பாடல்கள் செய்யுட்கள் இயற் றுந் திறனும் இவர்களுக்கு ஏற்பட்டது. 1912-ஆம் ஆண்டு பர்மாவிலிருந்து தாய்நாடு திரும்பியதும்

இவர்கள் இயற்கையாகவே தமிழ் இயல் இசைப் பாடல்களை இயற்றிக் கொண்டு வந்ததால் உள்ளூர்ப் பிரமுகர்களும், அயலூர் மக்களும் "கவிராயர்" என்று இவர்களை அழைக்கத் தொடங்கினர். நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் வழக்கப்படி இவர்கள் பர்மா நாடு செல்வதும் அங்கு இரண்டு அல்லது மூன்று ஆண்டுகள் இருந்து விட்டுத் திரும்பத் தாய்நாடுவருவதுமாக இருந்ததால்அந்தக் காலங்களில் இவர்கள் இயற்றிய பாடல்களெல்லாம் முறையாக எழுதி வைக்கப் பெருத காரணத்தால் இரண்டொன்றைத் தவிர மற்றவை தற்போது கிடைக்கவில்லை. பிறகு 1926ல் இவர்கள் பர்மியத் தலைநகரான இரங்கூன் நகரத்தில் நகரத்தார்களின் கொடுக்கல் வாங்கல் கடைகளில் ஏஜண்டாக வேலைபார்த்த காலத்தில் அங்குள்ள இரங்கூன் தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கத்துடன் தொடர்பு கொண்டு அச்சங்க ஆண்டுவிழாவுக்காக வன்னியும் கிணறும் இலிங்கமும் அழைத்த திருவிளையாடற் புராண வரலாற்றை நாடக உருவத்தில், கதை, வசனம், பாடல்கள், டைரக்‌ஷன் ஆகிய நான்கு பொறுப்பையும் ஏற்று, நடத்தி வைத்தார்கள். அதற்கடுத்த ஆண்டில் தாய்நாடு திரும்பினுலும் இங்கிருந்து கொண்டே 1927ல் 'திருநீலகண்டர்' என்ற பெரிய புராணக் கதையையும், 1928ல் பழியஞ்சின திருவிளையாடற் கதையையும், கதை, வசனம், பாடல்களைமட்டும் எழுதியனுப்பி அந்த நாடகங்கள் இரங்கூனில் நன்கு நடைபெறுவதற்கு உதவினுர்கள். 1927 முதல் தொடர்ச்சியாகச் சில ஆண்டுகள் தாய்நாட்டிலேயே இருக்கும்படியான சூழ்நிலை ஏற்பட்டவுடன் மகிபாலன்பட்டி மகாமகோபாத்தியாய முதுபெரும் புலவர் சைவசித்தாந்த வித்தகர் பண்டிதமணி உயர்திரு மு. கதிரேசச்செட்டியார் அவர்களின் வற்புறுத்தலின் பேரில் மேலைச்சிவபுரியிலுள்ள சன்மார்க்க சபையைச் சேர்ந்த தமிழ்க் கல்லூரி

யாகிய கணேசர் செந்தமிழ்க் கல்லூரியில் சேர்ந்து சில ஆண்டுகள் தமிழ் இலக்கண இலக்கியப் பாடங்களை முறையாகக் கற்று அத்துறையில் நிறையப் பயிற்சி பெற்ருலும் தேர்வுக்குப் போகுமுன்னர் மீண்டும் பர்மா வுக்கு "திரைகடலோடியும் திரவியம் தேடு" என்ற பழமொழிக் கேற்பப் பொருளீட்டச் செல்லும்படி நேர்ந்தது.

*இருவேறு உலகத்து இயற்கை திருவேறு*
*தெள்ளிய ராதலும் வேறு.*

என்ற பொய்யா மொழிக்கிலக்காக இவர்கள் தமிழ்த் துறையில் அதிகம் ஈடுபட்டதால் வணிகத்துறையில் விரும்பிய வண்ணம் மதிப்பு உண்டாகாத காரணத் திஞல் பர்மிய நாட்டு மொழியைப் பேசமட்டும் இது வரை கற்றுக்கொண்டிருந்த இவர்கள் அம்மொழியை நன்கு பயிலுவதெனத் தீர்மானித்து அதற்குரிய பாடங் களைப் பயின்றும், பர்மியப் பத்திரிகைகளைப் படித்தும், பர்மிய மொழியை நன்கு எழுதவும் பேசவும் கற்றுக் கொண்ட இவர்கள், 1950க்குள் பர்மியமொழியில் இசைப் பாடல்கள் எழுதக்கூடிய ஆற்றலும் கைவரப்பெற்றவ ராஞர்கள். இக்காலத்தில் பர்மிய நாட்டிலிருந்த தமிழன் பர்களின் வேண்டுகோளுக் கிணங்க மூன்று சிறிய தமிழ் நூல்களை இயற்றி வெளியிட்டார்கள், பிறகு 1962-ம் ஆண்டில் தாய்நாட்டுக்குத் திரும்பி வந்தார்கள். வயதான காரணத்தாலும், முன்போல் உடல்நிலை இடந் தராததாலும், தம் சொந்த ஊராகிய வேகுப்பட்டி யிலேயே இருந்து வருகிருர்கள். சுமார் முப்பது ஆண்டு களாக இவர்கள் பர்மாவில் வணிகத் துறையில் இருந்து வந்திருக்கின்ருர்கள்.

1924 முதல் 1971வரை தமிழ்க் கவிதைத் துறையில் இதுவரை - 32 நூல்கள் இவர்களால் இயற்றப்பெற்றுள் ளன. இவற்றுள் 1969ல் வெளிவந்த பூம்புகார் ஆற்றுப் படை என்ற நூல் இலக்கியச் சிறப்பமைந்ததொன்ரு கும். 1971ல் வெளிவந்திருக்கின்ற "உலகியல் நூலறி வுப் பாடல்கள்" என்ற நூல் இலக்கண இலக்கியச் சிறப்புக்களை விளக்கிக் காட்டும் தொகை நூலாகும்.

இவர்களால் இதுவரை இயற்றி அச்சிடப்பெரு திருந்த பல்வகைப் பாடல்களை ஒருங்கு திரட்டி "தமிழ்ப் பூம்பொழில்" என்ற பெயரில் தொகுத்து இந்நூலை இப் போது வெளிவரச் செய்திருக்கின்ருர்கள். பல இனிமை யான இயலிசைப் பாக்களைக்கொண்ட இந்நூலைத் தமிழன்பர்கள் அனைவரும் வாங்கிப் படித்து இன்புற வேண்டுகிறேன்.

இவர்தம் மனைவியார் காலஞ்சென்று பல ஆண்டுகள் ஆகின்றன. பிள்ளைகள் மூவரின் நலன் கருதி இவர்கள் மீண்டும் திருமணம் செய்துகொள்ளாமல் தனிமையா கவே வாழ்ந்து வருகின்ருர்கள். இவர்களுக்கு இப் பொழுது வயது 71. ஆகின்றது. இன்னும் தமிழ்த் தொண்டே தலைசிறந்ததென்ற முறையில் தொண்டாற்றி வருகின்ருர்கள். இவர்கள் இன்னும் பலகாலம் உடல் நலத்தோடு இருந்து இன்னும் பல தமிழ் நூல்களை இயற்றித் தமிழ் மக்களுக்கு உதவவேண்டுமென்றும், இந்நூலின் சிறப்புரிமையை ஏற்று இந்நூலைச் செவ்விய முறையில் வெளியிடுவதற்கு உதவிய தமிழ்க்கொடை வள்ளல் தேவகோட்டை உயர்திரு உ. ராம. மெ. சுப. சேவு. அண. அண்ணமலைச் செட்டியாரவர்கள் இதைப் போன்ற பல தொண்டுகள் புரிந்து எல்லா நலன்களும் பெற்று நீடுழி காலம் வாழ வேண்டுமென்றும், எல்லாம் வல்ல இறையருளை வாழ்த்தி வணங்கிப் பிரார்த் திக்கின்றேன்.

14—3—72
வேகுப்பட்டி

ஆவ. இராமநாதன் M. A.
*தலைவர், ஊராட்சி மன்றம்.*
வேகுப்பட்டி.

## இந் நூலாசிரியர் இயற்றிய நூல்கள்.

| என் | நூலின்பெயர் | நூல் தோன்றிய ஆண்டு | யாப்பின் வகை. |
|---|---|---|---|
| 1 | ஸ்ரீ தையநாயகிஅம்மன் பதிகங்கள் | 1924 | விருத்தப்பாக்கள் |
| 2 | வன்னியும் கிணறும் இலிங்கமும் அழைத்த சரித்திரம் | 1926 | இசைப்பாடல்கள் |
| 3 | மக்கள் தாலாட்டு | 1927 | இசைப்பாடல் |
| 4 | திருநீலகண்ட நாயனுர் சரித்திரம் (பண்டிதமணி அவர்களின் முன்னுரையுடன்) | 1934 | இசைப்பாடல்கள் |
| 5 | ஸ்ரீ தையநாயகி அம்மன் தோத்திரப்பாக்கள் | 1934 | நேரிசைவெண்பா |
| 6 | அழகியமெய்யர் சுவாமி பதிகம் | 1934 | ஆசிரிய விருத்தம் |
| 7 | வலம்புரி ஸ்ரீ மலையாண்டி சுவாமி பதிகம் | 1934 | எழுசீர் விருத்தம் |
| 8 | மோல்மேன் (பர்மா) ஸ்ரீ தெண்டாயுதபாணி பதிகம் | 1948 | அறுசீர் விருத்தம் |
| 9 | தட்டோன் (பர்மா) பீன்லாயின் தெண்டாயுதபாணி பதிகம் | 1948 | அறுசீர் விருந்தம் |
| 10 | மோல்மேன் (பர்மா) சிவஸ்தலம் ஸ்ரீ முருகக் கடவுள் பதிகம் | 1951 | எண்சீர் விருத்தம் |
| 11 | மக்கள் தாலாட்டு 2-ம் பதிப்பு | 1965 | இசைப்பாடல் |

## இந் நூலாசிரியர் இயற்றிய நூல்கள்.

| என் | நூலின்பெயர் | நூல் தோன்றிய ஆண்டு | யாப்பின் வகை. |
|---|---|---|---|
| 12 | தேனிமலை முருகக்கடவுள் தேவாரப் பண்ணிசைப் பதிகம் | 1965 | தேவார இசை |
| 13 | மழைவேண்டுங் கலி வெண்பா | 1966 | கலி வெண்பா |
| 14 | திருமால் தசாவதாரப் பதிகம் | 1966 | நேரிசை வெண்பா |
| 15 | கண்ணன் துதிப்பாடல் | 1966 | இசைப்பாடல் |
| 16 | ஆறுபடை வீடுடைய அருள்முருகன் அகவற்பா | 1966 | ஆசிரியப்பா |
| 17 | குயில் நீ கூவாய் | 1967 | எண்சீர் விருத்தம் |
| 18 | காடப்பிள்ளை ஐயனார் பதிகம் | 1967 | எண்சீர் விருத்தம் |
| 19 | மலையாண்டிசுவாமி பதிகம் 2-ம் பதிப்பு | 1967 | எழுசீர் விருத்தம் |
| 20 | வேவுநகர் ஏனமாரி அம்மன் துதிப்பாடல்கள் | 1967 | இசைப் பாடல்கள் |
| 21 | அழகியமெய்யர் பதிகம் 2-ம் பதிப்பு | 1967 | விருத்தப்பாக்கள் |
| 22 | திருக்குறள் நூற்சிறப்பு | 1968 | நேரிசை வெண்பா |
| 23 | முத்துக்கருப்ப விநாயகர் பதிகம் | 1968 | கட்டளைக் கலித்துறை |
| 24 | பத்திரகாளியம்மன் துதிப்பாடல்கள் | 1968 | சந்த விருத்தம் |
| 25 | குடும்பக் கட்டுப்பாடு | 1968 | எண்சீர் விருத்தம் |

## இந் நூலாசிரியர் இயற்றிய நூல்கள்

| எண் | நூலின்பெயர் | நூல் தோன்றிய ஆண்டு | யாப்பின் வகை. |
|---|---|---|---|
| 26 | பூம்புகார் ஆற்றுப்படை ஒளவை துரைசாமிப்பிள்ளை அவர்கள் முன்னுரையுடன் | 1969 | நேரிசை ஆசிரியப்பா |
| 27 | ஐயப்பசுவாமி பாடல் | 1970 | விருத்தப்பா |
| 28 | காந்திமகான் பெருமை | 1970 | இசைப்பாடல் |
| 29 | மாமனும் மருகனும் | 1971 | கலிவெண்பா |
| 30 | பாரததேச பக்திப்பாடல் | 1971 | இசைப்பாடல் |
| 31 | தேனிமலை முருகன் திருப்புகழ் வண்ணப் பாடல்கள் | 1971 | திருப்புகழ் இசை |
| 32 | உலகியல் நூலறிவுப் பாடல்கள் | 1971 | வெண்பா கலிப்பா விருத்தப்பா |
| 33 | முத்துப்பழநிஆண்டவர் பதிகம் | 1972 | விருத்தப்பா |

உ சிவமயம்.

# என்னுரை.

---

[நிலைமண்டல ஆசிரியப்பா]

உலகமா மகளின் ஒளிர்வா ணுதற்கண்
திலகமாய் விளங்குஞ் செவ்விய தீந்தமிழ்
இயலிசை நாடகம் என்றமுத் துறையினிற்
பயிலிய பண்புப் பரிவுறு பணியால்
என்னிள வயதுதொட் டிற்றைநாள் வரைக்கும்
மன்னிய நீண்ட ஆண்டுகள் வரைந்த
புல்வகைப் பைந்தமிழ்ப் பாடல்கள் பழமைச்
சொல்வகை இலக்கியத் தொடர்புகொள் நூல்பல
சிறிதும் பெரிதுமாய்ச் சீரிய முறையில்
அறிஞர்கள் உவக்க அச்சிடப் பெற்றன.
அவைதவிர்த் தேனை அச்சிடா திருந்த
சுவைதரு பாடல்கள் நான்தொடுத் தவையெலாம்
திருவருட் செயலால் தேடித் திரட்டி
ஒருபெரும் நூலாய் உலகினில் ஒளிர
கமழ்தரு போற்றித் தமிழ்மல ரெனவும்
மல்கிய இன்ப வளனெலாம் மருவிய
பல்சுவைத் தமிழ்மல ரெனவும் பகுத்து
முப்பிரி வாக்கி முந்தையோர் முறையில்
தப்பிலாச் சரித்திரச் சான்றுபோல் மலர்த்தேன்
இமிழ்த்தலுண் அளியின இசையுள் ளுறைதரு
தமிழ்ப்பூம் பொழிலெனுந் தகுதிசால் பெயரில்
இந்நூல் தன்னை இயற்றியிப் புவிக்கு
மன்னுபொன் நூலாய் வழங்குதும் மகிழ்ந்தே,
மன்னுமிப் பொன்நூல் வளனொடும் மாண்பொடும்
உன்னத முறையில் வெளிவரற் குதவிய
அன்பர்கள் தம்மை அமைவுறும் அணியில்
இன்பமோ டிசைத்தீங் கியம்புவன் நன்றி
இந்நூல் உரிமை ஏற்றபே ரண்ணல்

நன்னூல் இதைஆய்ந் தணிந்துரை நல்கியோர்
கடையெழு வள்ளல்கள் குழுவுடன் கணக்கிடத்
தடையிலாத் தகுதியுந் தரமும் வாய்ந்தோர்
நலனுறுந் தேவ கோட்டைநன் நகரினர்
வலனுறுஞ் செல்வ வணிகர்தம் மரபினர்
பண்ணார்ந் தொளிர்பூம் பைந்தமிழ்க் காவலர்
அண்ணாமலைவேள் ஆண்டகை தமக்கும்
சீர்த்திகொள் இந்நூற் சிறப்பினை ஆய்ந்து
வாழ்த்துரைச் செய்யுள் மகிழ்வுடன் வழங்கிய
முதுபெரும் புலவர் முக்கணாம் பெருமான்
அதிபராய்த் தோன்றி அடியவ ரிடையே
திருவிளை யாடல் புரியணி கூடல்
மருவிய தலமாம் வளநகர் மதுரையின்
அல்கலில் கலைவளன் மல்கிமிக் கொளிரும்
பல்கலைக் கழகப் பதிதுணை வேந்தர்
பாவலர் போற்றிப் பரவுவிற் பன்னர்
நாவலர் வரத ராசனார் தமக்கும்
திகழ்தருமுத் தமிழ்ச் சீர்நிறை இந்நூற்(கு)
அகவுரை வழங்கிய அருங்குணச் செம்மல்
தகுபொறை அன்பு தண்டமிழ்ப் புலமை
மிகும் அழகப்ப வித்தகர் தமக்கும்
என்வரலாற்றுரை வழங்கிய எமதூர்
அன்பர் இராம நாதர் அவர்க்கும்
தொழின்மிகும் பணியிடைத் தூயஇந் நூலினை
எழின்மிக அச்சிட் டியைத்தமைத் துதவிய
வான்றொடு மாடநீண் மணிநகர் காரை
ஆன்றதென் னிந்திய அச்சகத் தார்க்கும்
ஒன்றிய உழுவலின் உணர்வுகொண்டோங்குமென்
நன்றியை நண்பொடும் நவிலுதும் நயந்தே.

வேகுப்பட்டி
31—7—1972

பெரி. இலக்குமணன்.

சிவமயம்.

கணபதிதுணை.

# தமிழ்ப் பூம்பொழில்.

காப்பு.

## விநாயகர் துதி.

[நேரிசை வெண்பா]

பூவார் தமிழ்ப்பூம் பொழிலென்னும் பொற்பெயரால்
மாவாரிந் நூலை மகிழ்ந்தியற்றப் — பாவால்யாம்
போற்றும்பொன் ஐங்கரனைப் போற்றி அவன் பொற்பாதம்
ஏற்றுதுமெஞ் சென்னி இணைத்து. (1)

——

## கலைமகள் துதி.

[நேரிசை வெண்பா]

போற்றுதமிழ்ப் பூம்பொழிலின் பூக்களினப் போதியல்பைச்
சாற்றுதற்கென் நாவின் தலத்திருப்பாய்—ஏற்றுபுகழ்
மாணிசையாழ்ப் பாணிமலர் வேணியெழிற் பூணிசைகொள்
வாணியெனைப் பேணி மகிழ்ந்து. (2)

——

2ஆவது பாடல் 1ஆவது வரி: போது – மலரும் பருவத்துள்ள அரும்பு.
,, 3ஆவது வரி: மாணிசை – (மாண் இசை) மாட்சிமை பொருந்திய. (இராகம்) ஒலி.
,, ,, எழிற் பூணிசைகொள் - அழகு பொருந்திய ஆபரணங்களைத் தரித்த புகழ்கொண்ட.

# நூல்.

## போற்றித் தமிழ் மலர்

### சிவபெருமான் துதி

*[அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்]*

வடிவுடைக் கடவுட் கங்கை
மணிமுடிச் சடையிற் சூடிக்
கொடியவெவ் விடத்தை மாந்திக்
குரவைகொண் டுடுத்தி நீண்ட
படியும்வா னுலகும் மற்றைப்
புவனமும் பரிக்கு மீசன்
கடிமலர் கமழுஞ் செம்பொற்
கழலிணை முடிமேற் கொள்வாம். (3)

——

### பார்வதி துதி

*[அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்]*

பைம்புனிதச் சூன்மேகப் படிவநிறப் பனிமுகமும்
பதும நாபன்
தம்புனிதச் சீர்முறையாத் தந்தொளிருஞ் சரப்பணிகள்
தயங்கும் மார்பும்
செம்பவள வாயிதழுஞ் சிற்றிடையுஞ் சீறடியுந்
திகழுந் தெய்வ
அம்பிகையாள் பார்ப்பதியென் அன்னைமலர்த்
தாளிணைகள்
அகத்துள் வைப்பாம். (4)

——

4 ஆவது பாடல்: 1 ஆவது வரி: படிவ நிறம்—உருவஒளி.
,, 3 ஆவது வரி: சரப்பணிகள்-வைரம் பதித்த கழுத்தணிகள்
,, 7 ஆவது வரி: பார்ப்பதி – பார்வதி.

## திருமால் துதி

*[நேரிசை வெண்பா]*

வண்ணத் துளவ மணிமார்பா மாதவனே
எண்ணத் துதிக்க இனியவனே—பண்ணமைந்த
பூவை இலக்குமியாள் பொன்னகக்கண் பூத்திடநின்
சேவைதந் தாள்வாய் தினம். (5)

——

## திருமகள் துதி

*[நேரிசை வெண்பா]*

வேய்தலுறும் பூமலர்த்தார் மேனியின்கண் யானன்பு
தோய்தலுறும் பாமலர்த்தார் சூட்டுதற்குத்—தாய்போலப்
பொன்னுக்குஞ் செங்கமலப் பூமகளே வந்துநீ
என்னகக் கண் என்றும் இரு. (6)

——

## கலைவாணி துதி

*[நேரிசை வெண்பா]*

பண்வளர்க்கும் இன்னிசையாழ்ப் பாணி பயிலறிவுக்
கண்வளர்க்கும் ஞானக் கலைவாணி—வெண்முளரிப்
பூமகளே சொன்னூற் பொருண்மகளே பொங்குதமிழ்ப்
பாமகளே நீஎனக்கண் பார். (7)

——

6 ஆவது பாடல்: 3 ஆவது வரி: பொன்னுக்கும் – அழகைச் சொரிகின்ற

## சரஸ்வதி பூசைச் சிறப்புப்பாடல்

*[கட்டளைக் கலித்துறை]*

மாமகள் நேசமும் வான்புகழ் கல்வியும்
வண்ணவுமைக்
கோமகள் ஆசியுங் கொண்டுவாழ் வாரிக்
குவலயத்தில்
பாமகள் நுண்ணிசை யாழ்மகள் வெண்ணிறப்
பங்கயப்பொற்
பூமகள் பொற்றமிழ் நாமகள் பூசை
புரிகுநரே. (8)

——

## முருகக் கடவுள் துதிப்பாடல்

*[கட்டளைக் கலித்துறை]*

தேவா ரெழில்விழி யாள்குறப் பாவையைச்
சேரமுன்மா
தேவா மருவுதற் கென்றவ னேபிணி
தீர்க்குமருந்
தேவா ரணமுகன் பின்னவ னேபொற்
சிலம்பனெனுந்
தேவா தருகநின் மாமணப் பூமலர்ச்
சேவடியே. (9)

——

9 ஆவது பாடல் : 1 ஆவது வரி: தேவாரெழில் – (தேஆர்எழில்) தெய்வத் தன்மை நிறைந்த அழகிய.
,, 2 ஆவது வரி: கடைசி எழுத்து, மா- } மாதே! என்பதாம்
,, 3 ஆவது வரி: முதல் எழுத்து தே- }
,, 4 ஆவது வரி: கடைசிச் சொல் -மருந் } மருந்தே என்பதாம்
,, 5 ஆவது வரி: முதல் எழுத்து -தே }
,, 7 ஆவது வரி : முதற்சீர் தேவா – கடவுளே ! என்பதாம்.

## முருகக் கடவுளின் ஆறுபடை வீட்டையும்

### குறிப்பிட்டுச் சிறப்பிக்கும் பாடல்

*[கட்டளைக் கலித்துறை]*

தொன்றுசீ ரோங்குந் திருப்பரங் குன்றெடு
　　தூயசெந்தூர்
ஒன்றுசீர்ப் பேரா வினன்குடி ஏரக
　　ஒண்குறிஞ்சிக்
குன்றுதோ ருடல் பழமுதிர் சோலைக்
　　குருபரவேள்
என்றுகூ ருறு படைவீட் டிறைவனை
　　ஏத்துதுமே. (10)

——

## வேகுப்பட்டி என்ற வேலூர் ஊருணித் தென்கரையில்

### கோயில்கொண்டு வீற்றிருக்கும்

### கணபதி துதி

*[நேரிசை வெண்பா]*

சீர்வேலூர் நீர்வாவித் தென்கரையின் கோயிற்கண்
நார்மேவ வீற்றிருக்கும் நல்லறுகுத் – தார்மேவும்
செல்வக் கணபதியென் சேவையெலாஞ் சித்திபெற
நல்வரங்கள் தாநீ நயந்து. (11)

——

### வேகுப்பட்டி சிவன் கோயிலின்கண் வீற்றிருக்கும்

## ஸ்ரீசிவலோகநாதர் சிவகாமசுந்தரி அம்மன்

### சிறப்புப் பற்றிய துதிப் பாடல்கள்

*[நேரிசை வெண்பா]*

(1) திருவளரும் வேலூர்ச் சிவலோக நாதர்
　உருவளரும் ஞான ஒளியின் – பெருவளத்தை
　நாடித் துதிப்பேன்யான் நல்லதமிழ்ச் செய்யுட்கள்
　பாடித் தினமும் பணிந்து ..... (12)

*[கட்டளைக் கலித்துறை]*

(2) சிவமேவு பண்பிலா மூவாசை யென்னுந்
திரைசெறிந்த
பவமேவு மாயப் பரவைச் சுழற்கண்
படிந்துழலா
நவமேவு நின்ருள் துதிபே றெமக்குநீ
நல்குவையால்
தவமேவு மன்புச் சிவகாம சுந்தரித்
தாயுமையே. (13)

*[நேரிசை வெண்பா]*

(3) சீராரெம் அன்னை சிவகாம சுந்தரியை
தாராரோர் பங்கில் தரித்தொளிரும் – பேரார்வ
அம்பொற் சிவலோக நாதர் அடிபணிவார்
உம்பர்போல் வாழ்வார் உயர்ந்து. (14)

——

**வேகுப்பட்டி நகரத்தார் ஊருணியின் மேற்குக் கரையில் திருக்கோயில் கொண்டிருக்கும்**

## ஸ்ரீமுருகக் கடவுள் துதிப்பாடல்கள்

*[நேரிசை வெண்பா]*

(1) நன்மையுறும் வேவூர் நகரத்தார் ஊருணியின்
தொன்மையார் மேற்குத் துறையகக்கண் —
வண்மையுறு
கோயில்கொண் டோங்குங் குமரா அருள்புரிவாய்
சேயென் பழவினைகள் தீர்த்து. (15)

---

13 ஆவது பாடல்: 1 ஆவது வரி: மூவாசை – மண், பெண், பொன்.
,, 2 ஆவது வரி: திரை – அலை.
,, 3 ஆவது வரி: பரவை – கடல்.
14 ஆவது பாடல் 4 ஆவது வரி: உம்பர் – தேவர்.
15 ஆவது பாடல் 1 ஆவது வரி: ஊருணி–ஊரார் உண்ணும் நீர் எடுக்குங் குளம்.
,, 2 ஆவது வரி: வண்மை – வளப்பம், புகழ், அழகு.
,, 4 ஆவது வரி. சேயேன் – சேய் என் என்பதன் திரிபு.

[கட்டளைக் கலித்துறை]

2) செந்தண்மை பூண்டொளிர் வேவூர் வளர்தரு
சேவலனும்
கந்தன் உமைசுதன் கார்த்திகைப் பெண்கள்
களிப்புறுநன்
மைந்தன் அடியர் வினைதீர்த்தாட் கொள்ளும்
மயில்முருகன்
பைந்தண் மலர்த்தாள் பரவுநர்க் கென்றும்
பவமிலையே. (16)

[நேரிசை வெண்பா]

3) திடமேவும் வேவூர்த் திருநகர வாவிக்
குடபாற்கண் வீற்றிருக்குங்கோவேள்-இடர்நீக்கும்
பாலமுருகன் பதம்பணிவார் பல்லாண்டு
தாலமிசை வாழ்வார் தழைத்து. (17)

——

வேகுப்பட்டி என்ற வேவுமாநகர்

## ஸ்ரீ ஏனமாரி அம்மன் சிறப்புப்பற்றிய துதிப்பாடல்கள்

[கலி விருத்தம்]

1) வான மாரி பொழிந்து வளம்மிகு
தான மாரி சொரிந்து தனத்தொடு
ஞானமாரி சுரந்து நலந்தரும்
ஏன மாரி பதந்தனை ஏத்துவாம். (18)

16 ஆவது பாடல்: 1 ஆவது வரி: செந்தண்மை பூண்டொளிர் — எல்லா உயிர்கள் மேலும் செவ்விய தண்ணளியை அதாவது கிருபையைப் பூண்டு விளங்குதல்
,, 8 ஆவது வரி பவம் – பிறப்பு.
17 ஆவது பாடல் 2 ஆவது வரி குடபால் - மேற்குப் பக்கம்.

*(14 சீர்க்கழிநெடிலடி ஆசிரிய வண்ணவிருத்தம்]*

2) வளருஞான புவனதீப நிலவுலாவு ககனமேக
மலருநீல முகவிலாச மாலினி
மகிடசூர னுடலமீது நடனமாடு பதவினோத
மகிமைகூடு மறைகளோது மாதரி
தளருமாய இருள்களேக அருளினூர்வ ஒளியைவீசு
சகலபூத இறைவிநேர் தயாபரி
சனகராதி முனிவர்தேடு பரமனுரின் இடதுபாகத்
தலைவியான தருமதேவி சாம்பவி
களமர்கூடி உழவுசெய்து கழனிதோறும்
நறியசெந்நெல்
கமழஆலி பொழிய உய்க்குங் காரணி
கவிஞராம்நந் தமிழிலக்கு மணரிராநற் பகலியற்றுங்
கவியெலாமிக் கொளிரவைக்கும் நாரணி
அளவிலாநுண் கலைகளோடு நிறுவிநீள்நின்
புனிதவாசல்
அணுகியாமுன் மகிமைபாட அருளுவாய்
அரியவேவு நகரமக்கள் பெருமையோடு பரவுவேத
அமுதவாரி அருணன்மாரி அழகியே. (19)

முற்றும்வெண்சீர் வெண்டளைபெற்று ஏந்திசைச்
செப்பலோசையான் வந்த

[நேரிசை வெண்பா]

3) நாயேனை ஆண்டருளும் நாயகிபொன் வேவுநகர்த்
தாயேன மாரிமலர்த் தாள்பணிவார்—நோய்ஏனைத்
தீராத துன்பமெலாந் தீர்ந்துநனி வாழ்வார்முன்
வாராத நன்மையெலாம் வாய்த்து, (20)

——

19 ஆவது பாடல்: 9 ஆவது வரி: களமர் - மருதநில மக்கள்.
,, 10 ஆவது வரி: காரணி - மூலமாயுள்ளவள்.
20 ஆவது பாடல்; 2 ஆவது வரி: தாயேன - தாய்ஏன என்பதன் திரிபு.

## கொன்னையூர் முத்துமாரிஅம்மன்

### சிறப்புப்பற்றிய துதிப்பாடல்

*[கட்டளைக் கலித்துறை]*

தூய்முத்தர் கூடித் தொழுதேத்தி வேள்விசெய்
தொன்மையியல்
ஆய்முத்துப் பந்தர் அமைதரு கொன்னையூர்
ஆலயத்துள்
வாய்முத்தந் தந்தெமை வாழ்வித்தாட் கொண்டு
வளர்தருமெந்
தாய்முத்து மாரி பதம்போற் றுநர்க்கென்றுந்
தாழ்வில்லையே (21)

---

பொன்புதுவை எனப்பெயர்பெற்ற புதுப்பட்டி
சிவன்கோயிலின்கண் வீற்றிருக்கும்

## ஸ்ரீ பூலோகநாதர் புவனேஸ்வரி அம்மன்

### சிறப்புப்பற்றிய துதிப்பாடல்

*[கட்டளைக் கலிந்துறை]*

ஆலோடு நீண்ட கிளைபோற் றழைக்கும்
அமைப்புறுவர்
சாலோக மாதிய சாயுச்ய வாழ்வுந்
தரப்பெறுவர்
மேலோர்கள் வாழ்த்து மிகும்பொன் புதுவை
வியன்நகர்வாழ்
பூலோக நாதர் புவனேஸ் வரிபதம்
போற்றுநரே. (22)

---

21 ஆவது பாடல்: 3 ஆவது வரி: முத்துப்பந்தர் – முத்துக்கள் பதித்த சபாமண்டபம்

22 ஆவது பாடல்: 3 ஆவது வரி: சாலோகமாதிய சாயுச்யம் – சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்யம் என்ற நான்கு பதவிகள்

" 6 ஆவது வரி; வியன் – பெருமை, சிறப்பு.

பொன் (புதுவை) புதுப்பட்டி இராமகாதை
விரிவுரை மன்றக்கட்டிடத்தின்கண் எழுந்தருளியிருக்கும்

## ஸ்ரீ இராமபிரான் துதிப்பாடல்கள்

*[நேரிசை வெண்பா]*

1) பொன்புதுவை மக்களெலாம் போற்றும் இராமகதை
மன்றம்வாழ் தேவா வரந்தருவாய்—வென்றிகமழ்
வேதா நளினமலர்ப் பாதா விநோதாபொற்
சீதா சமேதா தினம். (23)

*[நேரிசை வெண்பா]*

2) மராமரங்கள் வீழ மறஅரக்கர் மாள
இராமாவ தாரம் எடுத்த—நிராமயனே
உன்னருள்தந் தாள்வாய் உலகில்நின் பக்தரெலாம்
மன்னவர்போல் வாழ்வான் மகிழ்ந்து (24)

——

## வலம்புரி ஸ்ரீ மலையாண்டி சுவாமி

### சிறப்புப்பற்றிய துதிப்பாடல்கள்

*[கட்டளைக் கலித்துறை]*

1) அம்பொற்கை யிட்டதண் ணீரும் அமுதென
ஆகிடுமால்
செம்பொற்கை தொட்டநன் மண்ணும்பொன் னாகத்
திகழ்ந்திடுமால்
நம்பிக்கை கொண்டு நலமார் வலம்புரி
நன்நகர்வாழ்
தும்பிக்கை நாதன் மலையாண்டி பாதந்
துதிப்பவர்க்கே. (25)

---

23 ஆவதுபாடல்: 3 ஆவது வரி: வேதா - நான்கு வேதங்களாலும் பேசப்படுகின்ற கடவுளே!

24 ஆவதுபாடல்: 2 ஆவது வரி: நிராமயன் - கடவுள்,

[கட்டளைக் கலித்துறை]

(2) புலம்புரி ஞானம் புகழ்பொருள் கல்வி
புனை தருசீர்த்
தலம்புரிப் பொன்மனை நன்மக்கட் பேறு
தயவுபொறை
பொலம்புரி இன்னன பெற்றுவாழ் வாரிப்
புடவிமிசை
வலம்புரி வாழும் மலையாண்டி பாதம்
வழுத்துநரே. (26)

——

வலையபட்டி (வலம்புரி) மலையின்கண்
பொற்கோயில் கொண்டு வீற்றிருக்கும்

## ஸ்ரீவலம்புரிநாதர் வடுவகிர் விழி அம்மன்

சிறப்புத் துதிப்பாடல்

[எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்]

திருமலர் முளரிச் செல்வியர் இருவர்
சேர்தரக் குடிபுகுஞ் சிறப்பார்
உருமலர்த் தடஞ்சூழ் வலையமா நகரின்
ஓங்கலிற் கோயில் கொண் டொளிரும்
மருமலர் அணிகொள் வலம்புரி நாதர்
வடுவகிர் விழியுமை வண்ணப்
பெருமலர் அடிகள் பரவுநர் உலகின்
பேறெலாம் பெற்றுவாழ் குவரே (27)

——

27 ஆவது பாடல்: 1 ஆவது வரி: முளரிச் செல்வியர் இருவர் – திருமகள் கலைமகள் இருவராம்.
,, 4 ஆவது வரி: ஓங்கல் – மலை.
,, 8 ஆவது வரி: பேறெலாம் – பாக்கியங்கள், (செல்வங்கள்) எல்லாம்.

வையாபுரி மலையின்கண் வீற்றிருக்கும்

## ஸ்ரீ மலையாண்டி சுவாமியின் சிறப்புப் பற்றிய

துதிப்பாடல்

*[கட்டளைக் கலித்துறை]*

அலையாண் டுயர்தரு வையா புரிச்சிலம்
பாலயம்வாழ்
மலையாண்டி பொற்பதம் வாழ்த்தித் துதித்து
வணங்கிடுவார்
கலையாண் டொளிர்தர நீடூழி வாழ்வார்
கன தனப்பொன்
நிலையாண் டொளிர்தரு செல்வமோ டின்பம்
நிறைந்தினிதே (28)

——

28 ஆவது பாடல்: 1 ஆவது வரி; சலம்பு - மலை.

பொன்னமராவதிச் சிவன் கோயிலின்கண் வீற்றிருக்கும்

## ஸ்ரீ ஆவுடை நாயகி அம்பாள் சமேத சோழீஸ்வரர்

### சிறப்புப்பற்றிய துதிப்பாடல்

*[கட்டளைக் கலித்துறை]*

நாவுடைக் கல்வியோ(டு) ஏனைய செல்வ
நலம்பெருகும்
கோவுடைப் பொன்னம ராவதிக் கோயில்
குடிபுகுந்த
ஆவுடை நாயகி அம்பாள் சமேத
அமலனெனும்
பூவுடைச் சோழீஸ் வரருட் பொற்பதம்
போற்றிடினே. (29)

---

பொன்னமராவதி

## ஸ்ரீ அழகியநாச்சி அம்மன்

### துதிப்பாடல்

*[கட்டளைக் கலித்துறை]*

திருவளர் நாரணி தெய்வீக ஞானிநின்
செல்வஅருட்
பெருவளந் தந்தெமை வாழ்வித்தாட் கொள்வாய்
பிறங்குகலைத்
தருவளர் பொன்னம ராவதி வண்ணத்
தனித் தளிக்கண்
உருவளர் தேவி அழகிய நாச்சி
உமையவ்வளே. (30)

---

29 ஆவது பாடல்: 6 ஆவது வரி: அமலன் – கடவுள்.
30 ஆவது பாடல்: 6 ஆவது வரி: தளி – கோயில்.
,, 7 ஆவது வரி: உரு – பெருமை.

2526



### உடல் நோய் தீர்த்தருளுமாறு பொன்னமராவதி
## ஸ்ரீ அழகியநாச்சி அம்மன் மீது பாடியது

*[நேரிசை வெண்பா]*

பழகிய பொன்னமரர் வைகும் பதிவாழ்
அழகிய நாச்சியெனும் அம்மா – விழைவுறுநின்
பக்தன் எனைக்கடைக்கண் பார்த்துடல்நோய் தீர்த்
தருள்வாய்
உத்தமியென் தாயே உவந்து. (31)

——

### மேலைச்சிவபுரிச் சிவன்கோயிலின்கண் வீற்றிருக்கும்
## ஸ்ரீசொக்கலிங்கக்கடவுள் மீனாட்சி அம்மன்
### சிறப்புப்பற்றிய துதிப்பாடல்

*[எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்]*

திக்குளுயர் தமிழ்ப்புலவர் கலைக்கல் லூரி
திகழ்மேலைச் சிவபுரிக்கண் சீரும் பேரும்
மிக்குயர்ந்த தலமதனிற் கோயில் கொண்டு
மேன்மையுற வீற்றிருக்கும் விமலப் புத்தேள்
சொக்கலிங்கம் மீனாட்சி தூய செம்பொற்
றுணைமலர்த்தாள் துதிபுரிவார் சூழ்பே ராக்கம்
தக்கமனை மக்கணலன் தரப்பெற் றோங்கித்
தனதனைப்போல் வாழ்வாரித் தரணி மீதே (32)

——

32 ஆவது பாடல்: 4 ஆவது வரி: புத்தேள் - தெய்வம்
,, 6 ஆவது வரி: ஆக்கம் - செல்வம்
,, 8 ஆவது வரி: தனதனைப்போல் – குபேரனைப்போல்

### வேந்தன்பட்டி சிவன்கோயிலின்கண் வீற்றிருக்கும்

## நந்தியெம்பெருமான்

### சிறப்புப்பற்றிய துதிப்பாடல்

*[கட்டளைக் கலித்துறை]*

முந்திய தீவினை இன்னல் வறுமை
　　முரணகலும்
புந்தியின் ஆய்வுப் புகழ்மிகும் செல்வப்
　　பொருள்பெருகும்
மந்திர வேந்தன் நகர்ச்சிவன் கோயிலில்
　　மாணுருக்கொள்
நந்தியெம் அண்ணல் நறுமலர்த் தாளருள்
　　நாடுநர்க்கே. (33)

——

### தர்மபட்டி என்று அழைக்கப்பெறும்

## தருமபுரி ஸ்ரீ செல்வவிநாயகப் பெருமானின்

### சிறப்புப்பற்றிய துதிப்பாடல்கள்

*[நேரிசை வெண்பா]*

1) சொல்வளருந் தொன்மையியல் சூழுந் தருமபுரிச்
செல்வ விநாயகனைச் சேவிப்பார் – பல்வளன்கள்
மிக்குயரப் பெற்றிந்த மேதினிக்கண் அன்புமனை
மக்களுடன் வாழ்வார் மகிழ்ந்து. (34)

---

33 ஆவது பாடல்: 2 ஆவது வரி: முரண் – மாறுபாடு
,, 3 ஆவது வரி: புந்தி – மனம்
,, 5 ஆவது வரி: மந்திர – ஆலோசனைமிக்க (அமைச்சரைப் போன்ற அன்பர்கள் நிறைந்த)

*[கட்டளைக் கலித்துறை]*

2) கல்வியோ (டு) இன்பங் கருதுவான் செல்வம்
கனம் பெருகும்
பல்வகை நன்மைகள் மல்கப்பெற் றோங்கிப்
பயன் விளையும்
நல்வளன் மேவும் எழிலார் தரும
நகர்த் தளிவாழ்
செல்வ விநாயகன் தாண்மலர் போற்றித்
திளைப்பவர்க்கே. (35)

*[நேரிசை வெண்டா]*

3) தற்பரனுந் தாயுமையும் தந்த தருமபுரி
விற்பனவான் செல்வ விநாயகனின் – பொற்புனித
நற்பதத்தைப் போற்றுவார் நாளும் நனிபெறுவார்
கற்பகப்பூந் தாரின் கனி. (36)

— —

## தேனிமலை முருகன் சிறப்புப்பற்றிய

### துதிப்பாடல்

*[நேரிசை வெண்பா]*

அல்லல்தீர்த் தென்றும் அடியவரை ஆட்கொள்ளும்
மல்லல் மருத வயல்வளன்சூழ் – சொல்லரிய
வண்ணவரைத் தேனி மலைமுருகன் தாள்பணிவார்
விண்ணவர்போல் வாழ்வார் விழைந்து. (37)

— —

35 ஆவது பாடல் வேது வரி தளி–கோயில்.

## வயலூர் முருகன்துதி.

[முற்றும் புளிமாச்சீர்களாலாய தூங்கிசைச்
செப்பலோசையான் வந்த நேரிசை வெண்பா]

வளையார் மருத வயலூர் முருகன்
களையார் புழைக்கைக் கடவுட்—கிளையோன்
நறவார் கடம்பன் நறுந்தாட் பணிவார்
பிறவார் உலகில் பெயர்த்து. (38)

——

## மதுரை மீனாட்சிஅம்மன்துதி.

[நேரிசை வெண்பா]

செந்நெற் பழனஞ்சூழ் தென்மதுரை மீனாட்சி
அன்னை பராசத்தி அம்பிகையே—என்னைநீ
ஆண்டருள்வாய் பாவ அனலின் திரள்மூழ்கி
மாண்டழியா வண்ணம் மறித்து. (39)

——

## மதுரை சோமசுந்தரர்துதி.

[நேரிசை வெண்பா]

அன்புறுதென் மாமதுரை ஆனந்தா ஆர்வலரின்
துன்பந் தவிர்சோம சுந்தரனே—இன்புறுநின்
பாதமலர் ஈந்தென் பழவினைகள் தீர்த்தருள்வாய்
வேதமணி நாதா விரைந்து. (40)

——

38 ஆவது பாடல்: 1 ஆவது வரி: வளையார்– (வளைஆர்) சங்குகள் நிறைந்த.
,, 2 ஆவது வரி: களையார் (களைஆர்) அழகு நிறைந்த
,, 4 ஆவது வரி: பெயர்த்து-மறுபடி.
39 ஆவது பாடல்: 4 ஆவது வரி: மறித்து-தடுத்து.

## மதுரை மீனுட்சி சொக்கேசர்துதி.

*[நேரிசை வெண்பா]*

வானுட்சி செய்யும் மகேந்திரனும் வந்திறைஞ்சத்
தானுட்சி செய்த தனிமதுரை—மீனுட்சி
சொக்கேசர் பாதந் துதிப்பார் பலவளனும்
மிக்கோராய் வாழ்வார் விழைந்து. (41)

——

## திருச்செந்தூர் முருகன்துதி.

*[நேரிசை வெண்பா]*

மருட்சீ ரலையின் மயல்மாற்றும் வாரித்
திருச்சீ ரலைவாயின் தேவா—அருட்சீர்கள்
தந்தென்னை ஆள்முருகா சண்முகா மாமயின்மேல்
வந்தென்முன் தோன்றி மகிழ்ந்து. (42)

——

*31—7—1970ல் குற்ருலஞ் சென்றிருந்தபோது*

## குற்ருலநாதர் குழல்வாய்மொழி அம்மன்

**சிறப்புப்பற்றிப் பாடியது.**

*[நேரிசை, வெண்பா]*

குற்ருல நாதர் குழல்வாய் மொழிஅம்மன்
பொற்ருண் மலரிணையைப் போற்றுவார்—வற்ருத
செல்வமுடன் வாழ்வாரித் தேசமதில் நீடுழி
பல்வளன்கள் சூழப் படைத்து. (43)

——

## குற்ருல அருவிகளைச் சிறப்பித்துப் பாடியது.

[நேரிசை வெண்பா]

பேரருவி சிற்றருவி பேணுபுலி ஐந்தருவி
சாரல்முற் குற்ருலத் தண்ணருவி—சேருதிருக்
குற்ருல நீர்வீழ்ச்சி தம்மிற் குளிப்பாரைப்
பற்ருமுற் பாவப் படர். (44)

——

## நாட்டரசன்கோட்டை கண்ணுடைஅம்மன் துதி.

[எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்]

விண்ணுடை அமரர் வேள்விசெய் முனிவர்
வேதமா மறைபயில் விபுதர்
மண்ணுடை மனிதர் வளர்தமிழ்ப் புலவர்
மனமுற வாழ்த்தியே வணங்கும்
கண்ணுடை அம்மன் எனும்பெயர் கொண்ட
கன்னிமா தங்கிபூங் கௌரி
எண்ணுடை யெனது கலியெலாம் அகற்றி
ஏற்றெனைக் காத்தருள் இனிதே. (45)

——

45 ஆவது பாடல்: 7 ஆவது வரி: கலி-துன்பம்.

*(பர்மா) இரங்கோன் ஆறறை மேன்மாடியின்கண் வீற்றிருக்கும்*

## முருகக்கடவுள் துதி.

*[அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்]*

வியனுறுபொற் கடவுளடி மறவாத சீரடியார்
விரும்பு ஞான்று
புயல்பொழியும் பர்மியநாட் டணிநகரா மிரங்கோனிற்
பொலிவு சான்ற
நயமுறுநல் லாறறைமேன் மாடிதனில் வீற்றிருக்கும்
நாதன் செவ்வேள்
வயமுறுபொற் செழுங்கமல மலர்த்தாள்கள் எஞ்ஞான்றும்
மனத்துள் வைப்பாம். (46)

——

*(பர்மா) மோல்மேன்*

## ஸ்ரீ தெண்டாயுதபாணி சுவாமியின்

### துதிப்பாடல்.

*[நேரிசை வெண்பா]*

சால்வின் நதிபாயும் தண்மலர்ப்பூங் குன்றினஞ்சூழ்
மோல்மேன் திருத்தலத்துமூன் றறைக்கண்–வேல்முருகன்
சேவைதனைக் கண்டு தெரிசிப்பார் செங்கமலப்
பூவையருள் காண்பார் பொலிந்து. (47)

——

---

46 ஆவது பாடல்: 1 ஆவது வரி: வியன்-பெருமை.
,, 7 ஆவது வரி: வயம்-வெற்றி.

*(பர்மா) மோல்மேன் சிவஸ்தலம்*

## ஸ்ரீ முருகக்கடவுள் துதி.

*[எண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்]*

நீரோங்குஞ் செழுஞ்சாலிப் பழன மெங்கும்
நிறைந்தோங்கும் பர்மியநா டதனில் நேர்மைச்
சீரோங்குந் தருமநெறி பொறுமை செல்வஞ்
சிறந்தோங்கும் மோல்மேனைச் சேர்ந்த தேவர்
ஊரோங்குஞ் சிவஸ்தலத்தி னுளிர்பொற் குன்றில்
உயர்ந்தோங்குஞ் சண்முகனே உனது தெய்வத்
தாரோங்கும் பதம் நல்கிக் கிருபை யென்பால்
தழைத்தோங்கு மாறினிது தயைசெய் வாயால் (48)

——

## (பர்மா) தட்டோன் (தத்துவம்) பீன்லாயின் என்ற தலத்தில் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ தெண்டாயுதபாணி சுவாமி துதி.

*[அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்]*

நாமணக்குந் தமிழ்ப் பொழிலின் நால்வகைச்சொன்
மலரெடுத்து நவையொன்றில்லாத்
தேமணக்கும் அன்பெனும்நா ரிணைத்துவகைத்
தேன் பெய்து தெரிய லாக்கிப்
பூமணக்கும் நினதகத்திற் புனைந்திடுமென்
குறையகற்றிப் போதம் நல்காய்
மாமணக்கும் பசுஞ்சாலி வயல்மணக்கும்
பீன்லாயின் வளருங் கோவே. (49)

——

49 ஆவது பாடல் : 1 ஆவது வரி : நால்வகைச் சொல் – பெயர்ச் சொல் வினைச் சொல், இடைச் சொல், உரிச் சொல்.
,, 3 ஆவது வரி : தேமணக்கும் – தெய்வத்தன்மையுடைய.
,, 4 ஆவது வரி : தெரியல் – மாலை.

## (பர்மா) புரோம் நகர்

# ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி துதி.

*[எழுசீரடி ஆசிரிய வண்ண விருத்தம்.]*

வாளை பாய்ந்துயர் கமுகை வீழ்த்துநல்
வளஞ்செ றிந்துறு புரோம்நகர்
காளை வாகன னீன்றெ டுத்தநற்
கண்ய னேசுப்ர மண்யனே
நாளை யெண்ணியிவ் ஏழை யேனுறு
நலிமை நீங்கிட விரைவினில்
மாளை யொண்கணி யோடு மஞ்ஞையில்
வருக வருகநீ வருகவே. (50)

——

50 ஆவது பாடல் : 7 ஆவது வரி : மாளை - மாழை யென்ற சொல் எதுகை நோக்கி மாளை எனத் திரிந்தது :- (மாழையொண்கணி - மாவடுப் போலும் அல்லது மாம்பிஞ்சு போலும் ஒளி பொருந்திய கண்களையுடைய வள்ளி நாயகியோடு மயின் மிசை வருக என்பதாம்)

*வார்ப்பட்டு என்ற வாரூர்*

## ஸ்ரீ விசாலாட்சி அம்பாள் சமேத விஸ்வநாத சுவாமிக்கும் பரிவார தேவதைகளுக்கும்

*4 – 6 – 1971ல் நடைபெற்ற கும்பாபிஷேகத்தைச்*

**சிறப்பித்துப் பாடிய துதிப்பாடல்கள்.**

*[கட்டளைக் கலித்துறை]*

(1) சீருருங் கோயில் புதுக்குந் திருப்பணி
  செய்தமைத்தே
காருருங் கும்பாபி ஷேகங்கண் டோங்குங்
  கலைமலிந்த
பேரு ரெனத்திகழ் இம்மை மறுமைப்
  பெருமைதரும்
வாரூர் விசாலாட்சி விஸ்வேசர் பாதம்
  வழுத்துதுமே. (51)

*[நேரிசை வெண்பா]*

(2) வேதமுதல் வாரூர் விசாலாட்சி விஸ்வேசர்
பாதம் பணிந்து பரவுவார் - ஏதமெலாம்
நீங்கிநனி வாழ்வாரிந் நீணிலத்திற் பல்வளன்கள்
தாங்கிமகிழ்ந் தென்றுந் தழைத்து. (52)

---

51 ஆவது பாடல் : 3 ஆவது வரி : காருரும் - மேகங்கள் தவழுகின்ற.
52 ஆவது பாடல் : 2 ஆவது வரி ; ஏதம் – துன்பம்.

*[எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.]*

(3) பூமலர் விரியும் புனற்றடங் குறிஞ்சிப்
புறவயல் பொழில்வளன் புகுந்த
தேமலர் வாரூர்த் தலமதில் இனிமை
திகழ்தரக் கோயில் கொண் டொளிரும்
மாமலர் புனைந்த திருவிசா லாட்சி
மருவுவிஸ் வேசநின் அடிக்கண்
நாமலர் வனைந்த இலக்குவன் படைப்பை
நனிமகிழ்ந் தேற்றருள் இனிதே. (53)

---

*பரியாமருது பட்டியின்கண் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும்*

## ஸ்ரீ பரியாமருதீஸ்வரர் பார்வதிதேவி பரஞ்சோதி அம்மையாரின்

### துதிப்பாடல்.

*[கட்டளைக் கலித்துறை]*

சீர்வளர் செல்வப் பரியா மருதூர்த்
திருத்தலத்திற்
பேர்வளர்ந் தோங்குபொற் கோயில் கொண்டன்பர்
பிழையகற்றி
ஆர்வளன் நல்கும் பரியா மருதீஸ்
வரரவர்தம்
பார்வதி தேவி பரஞ்சோதி தாட்கள்
பரவுதுமே. (54)

---

53 ஆவது பாடல் : 3 ஆவது வரி : தேமலர் – தெய்வத் தன்மை விரிந்த.
,, 7 ஆவது வரி : வனைதல் – உருவமைத்தல், அலங்கரிக்கப் பெற்ற.

*பரியாமருது பட்டியின்கண் திருக்கோயில் கொண்டு எழுந்தருளி ஆண்டுதோறும் விமரிசையாய் நடைபெறும் உற்சவ மூர்த்தியாய் விளங்கி திருவுலாக் காட்சி தந்து மக்களுக்கெல்லாம் பலவித நன்மைகளை வழங்கி, காத்து மகிழ்வித்துவரும்*

## ஸ்ரீ சேவுகப் பெருமாள் சுவாமி மீது பாடிய

### துதிப்பாடல்.

*[எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்]*

பூவுறைப் புனிதப் புனனிறை மருதப்
புறவயல் பொதுளிய புரியாம்
பாவுரைக் கவிஞர் பரம்பரை அடியர்
பண்ணவர் விண்ணவர் பரவும்
மாவுறைப் பரியா மருதெனும் நகர்க்கண்
வளர்தரும் மகிமையார் வரதர்
சேவுகப் பெருமாள் திருமல ரடிகள்
தினந்தொறும் வழுத்துதும் திளைத்தே. (55)

— —

*பொன் புதுப்பட்டி என்ற பொன் புதுவை*

## உடைய பிராட்டி அம்பிகை மீது பாடிய

### துதிப்பாடல்.

*[கட்டளைக் கலித்துறை]*

புயல்கள் கருக்கொண்டு மாதமும் மாரி
பொழிதரவும்
வயல்கள் பயிர்கொண்டு தானியச் செல்வ
வளந்தரவும்
துயர்கொள் மிடிமைநோய் தீரவுந் தாய்மை
சுரந்தருள்வாய்
உயர்பொன் புதுவை உடைய பிராட்டி
உமையவளே. (56)

---

56 ஆவது பாடல்: 1 ஆவது வரி: புயல்கள் – மேகங்கள்.

## தேனிமலை முருகன் துதி.

*[கட்டளைக் கலித்துறை]*

புலந்தரு கல்வியும் பொங்குபூஞ் செல்வமும்
 பொற்புவனத்
தலந்தரு மேன்மையும் யாம்பெற நீவரந்
 தந்தருள்வாய்
பொலந்தரு வானுயர் தேனி மலைத்தளி
 புக்கமர்ந்து
பலந்தரு சண்முக நாதவே தாந்தப்
 பரம்பொருளே. (57)

---

## சிவபெருமானின் பெருமையைச் சிறப்பித்துத்

**தமிழ்நாட்டு மக்களை நோக்கிக் கூறுமுகத்தான் ஆக்கப்பெற்ற பாடல்.**

*[நேரிசை யொத்தாழிசைக் கலிப்பா.]*

(தரவு.)

அருள்வளங்கள் பெருகியொளிர் அமுதமழை
 பொழிதருபூம்
பொருள்வளங்கொள் செழியரொடு வளவரினப்
 புகழ்பெருகும்
தெருள்வளங்கொள் தமிழகத்தீர் சிவன்பெருமை
 கேட்பீரால்

---

57 ஆவது பாடல் : 5 ஆவது வரி : பொலந்தரு - அழகைத் தருகின்ற.
 ,, 7 ஆவது வரி : பலன் - பயன்.

(தாழிசை)

(1) பெட்பார்ந்த வரநதியும் பிறைமதியும் முடிமீது
நட்பாகக் கொண்டொளிரும் நறுங்கொன்றை
மலர்மார்பன்

(2) கரியநிற முகில்வண்ணன் கவினுலகந்
தனையாக்கும்
அரியயனுந் தெரிகில்லா அடிமுடியன்
உமைபாகன்

(3) வேதத்து மெறிதிரைநீர் விரிகடல்சூ ழுலகாரைம்
பூதத்தும் நிறைந்தொன்றிப் புவியியக்குந்
தனிமுதல்வன்
இனும்பலசீர்,

(சுரிதகம்.)

கொண்டு விளங்குந் தண்டமிழ்ப்புலவன்
அண்டரும் பரவும் அவன்றிரு மலர்த்தாண்
மனமுறப் போற்றி வாயுற வாழ்த்திக்
கனவிலும் நனவிலும் கைகுவித் தேத்திப்
பாமலர் தூவிப் பயில்பவர் தமக்கே
தோமிலாத் தன்பதந் துய்த்திட அருள்வான்
ஆதலின் அன்பீர் அவன்புகழ்
பாடுமின் பாடுமின் நீடுமிவ் வுலகே. (58)

——

58 ஆவது பாடல் : 2 ஆவது வரி : செழியர் - பாண்டியர்.
,, ,, வளவர் – சோழர்.
,, 4 ஆவது வரி : பெட்பு – பெருமை.
,, 14 ஆவது வரி : நனவு – விழிநிலை.

## கணபதி துதி.

(இராகம் வசந்தா தாளம் ஆதி)

*[பல்லவி]*

மலரடியிணை துணையே

மதம் பொழிந் திடுங் கய
மாமுகனேஅம்புய (மல)

*[அநுபல்லவி]*

நிலவும்பு விபாதலம் நீள்சுவர்க் கம் ஆதிய
தலமுழு தும்பரவித் தண்ணளி புரியும் நின் (மல)

*[சரணம்]*

நான்கு வகைச் சொன்மலர் நலமுடனே எடுத்து
நறியஅன் பெனுமிசை நாரதனில் தொடுத்து
தேன்சொரி யும்நின்தூய சேவடியை யடுத்து
தினமும் இலக்குவன்பூந் தெரியல்புனைதர நின் (மல) (59)

---

## கலைமகள் துதி.

[இராகம்-கல்யாணி-தாளம் ஆதி]

*[பல்லவி]*

கருணைபுரிவாய்—கலைமகளே நீ (கரு)

*[அநுபல்லவி]*

பொருணிறைவுறும் புனிதையேபதம்
சரணமடியேன் தருணமிதுவே (கரு)

---

59 ஆவது பாடல், 3 ஆவது வரி: அம்புயம்—தாமரை.
,, 9 ஆவதுவரி: தெரியல்—பூமாலை.

[சரணங்கள்]

1 இருணிறையற இசையெழில்பெற
மருணிறைதெற அருணிறைவுற
தெருணிறைமது விரிநளினவெண்
உருமலரின்மேல் வளரரசியே (கரு)

2 புனல்வளனிறை வனகழனிசூழ்
இனியவேவுமா நகரிலேயுறை
துனிதவிரிசை சொலுமிலக்குவன்
அனவரதமும் துதிசரஸ்வதி (கரு) (60)

——

## சிவபெருமான் துதி.

[இராகம்-பந்துவராளி தாளம் ஆதி]

(பல்லவி)

மறவா வரந்தாராய்—நின்பாதம்—(மற)

(அனுபல்லவி)

பிறவா வரமருள்
பெருமா னேயுலகிற்
பிறந்தால் நினதடி
பிரியா மலேஉனே (மற)

[சரணம்]

சேருல காசைச் செயல்க ணேராமல்
தீயஅஞ் ஞானத்திற் சிந்தைகூராமல்
ஏருலவுங்கொன்றைத் தாரணியுந்தேவா
இலக்குவன் துதிசெயும் ஈசனே நின்நாமம்—(மற) (61)

——

60 ஆவது பாடல்: 10 ஆவது வரி: துனி-துன்பம், வெறுப்பு.
,, 11 ஆவதுவரி: அனவரதம்--தினந்தோறும்.

## நெஞ்சறிவுறுத்தல்.

(இராகம்—தர்பார்—தாளம் ஆதி)

*[பல்லவி]*

மருவார்கொன்றையணியும் பெருமான் தில்லையம்பல
வாணனின் அடிமறவாய் நாளும் மனனே நீ (மரு)

*[அனுபல்லவி]*

திருநாளைப் போவாரெனும்-பெரியார்க்கருள்புரிந்த
தேவன் இலக்குமணன் பாவின்இசைக் குகந்த (மரு)

*[சரணம்]*

மருள்சேரிந் நிலவாழ்வின் மண்பெண்
பொன்னெனுமாசைப்
பொருளாதி யனதுஞ்சும் இருளிற்புகாமல் நித்தம்
அருள்சேர் பதமளிக்கும் பரனைக் கனிந்து துதி
புரிவாய் நிலைபேரின்பம் பெறுவாய் புவியி லென்றும்
(மரு) (62)

---

## நெஞ்சறிவுறுத்தல்.

[இராகம்-மோகனம் தாளம் ஆதி]

*[பல்லவி]*

வாழ்த்திப் பணிவாய் மனமே-தில்லை ஈசன்பொன்
மலரடி அனு தினமே (வாழ்)

*[அனுபல்லவி]*

தாழ்த்தும் பிறவிக்கடல் தாண்டநற் பதந் தந்து
தண்ணளி புரியுமுக் கண்ணன்கபாலிதனை—(வாழ்)

*[சரணம்]*

ஆசைக் கயிறதனில் ஆடும்பம் பரம்போன்ற
அநித்திய வாழ்வைநம்பி அழிந்துபோ காதேவெம்பி
நேசமிகும்நமசி வாயஎனும் மந்திரம்
நித்தஞ்சொலிப்பயின்று சித்தங்கரைந்துருக (வாழ்) (63)

## முருகப்பெருமான் பாடல்.

[இராகம் மோகனம் தாளம் ஆதி.]

*[பல்லவி]*

எங்குசொல்லிநான் தேறுவேன்—என்குறைதனை
எவரிடம் இனிக் கூறுவேன் (எங்)

*[அனுபல்லவி]*

கங்கைதனைச்சுமந்த சங்கரன் தவம்வந்த
கருணைமருவுமயில் முருகாஉன்னிடமன்றி (எங்)

*[சரணம்]*

பிறந்து பிறந்துலகில் பெற்றதுன்பங்கள் போதும்
மறந்துமினிப்பிறவா வரந்தரு வாயெப்போதும்
சிறந்த மணிமந்திரஞ் சிவபெருமானுக் கோதும்
செந்தாமரைமுகவேட் கந்தா உன்னிடமன்றி(எங்) (64)

——

## ஈசன் நடனக் காட்சிப் பாடல்.

[இராகம் - கல்யாணி – தாளம் – ரூபகம்.]

[பல்லவி.]

நடனமாடினுன் — தில்லை
நாதன் பொன்னம்பல
மீதில் ஆனந்த (நட)

[பல்லவித் தொடர்.]

1 நங்கைபூந் தடவரைமகள்
மங்கைசங் கரியுடனருள் (நட)

2 நற்புவி யிற்பெரு விற்பன
பொற்புறு கற்பனை யற்புத (நட)

3 நளினத் திருவடி தரிமறை
தெளிவுற்றகிண் கிணி யொலிபெற (நட)

---

65 ஆவது பாடல்: 9 ஆவது வரி: கிண்கிணி – காற் சதங்கை.

4 நாக ரிக சோக தாக
வேக யூக யாக யோக (நட)

5 நஞ்சையுண்டு மிஞ்சிநின்ற குஞ்சரத்தின்
வெஞ்சினங்கொன் றஞ்சேலென்ற
கொஞ்சலுறு (நட)

6 நளிர்தருபுன லெழிலரவணி
மிளிர்பிறைமதி விரிசடையொடு (நட)

[அநுபல்லவி]

திடமுள அடி யவரிட ரறச்
சிரித்து முப்புர முழுவது
மெரித்த சிற்பர அபிநய (நட)

[சரணங்கள்]

1 நாமகள் நாயகன் நல்வீணை மீட்ட
நந்தி மத்தளங் கொட்டிச்சுதி கூட்ட
பூமகள் மார்பன் புகழ்மாலை சூட்ட
பொங்குஞ் சுடரொளிதங்கிய – செங்கண் அருள்
பொழியிங்கித (நட)

2 இனஉம்பர்மகிழ்ந் தேத்திக் கொண்டாட
இலக்குவன் பதம் இந்திரன் பாட
தனதன் என்ரூப கதாளம்போட
தாகிடஜெம்தரி கிடதக - தத்தோம் ததிங்கிண
தோமென (நட) (65)

——

65 ஆவது பாடல் : 10 ஆவது வரி : நாகரிக – மரியாதை.
,, 11 ஆவது வரி : யூகம் – திறன், யாகம் – வேள்வி, யோகம் -தியான நிஷ்டை
,, 18 ஆவது வரி : சிற்பர கடவுட்டன்மையுள்ள.
,, 19 ஆவது வரி : நாமகள் நாயகன் – பிரமன்
,, 21 ஆவது வரி : பூமகள் மார்பன் – திருமால்
,, 23 ஆவது வரி : இனஉம்பர் – தேவர்கள் கூட்டம்.
,, 24 ஆவது வரி : இலக்குவன் பதம் – இலக்குவனுடைய இசைப்பாடல்
,, 25 ஆவது வரி : தனதன் – குபேரன்.

## திருமால் துதி.

*கபாலி என்ற பழம்பாடலின் இசை.*

(இராகம் – மோகனம் – தாளம் ஆதி)

[பல்லவி.]

முராரி

முறுவல் தவழுமெழில்
இனிய திருமருவு (முரா)

[அநுபல்லவி.]

அராவின் மேல்வெண்பால்
ஆழிக்கண் ணயர்ந்தொளிரும்
பரா பரமூர்த்தி
பாவலர் நாவலர் வாழ்த்தும் பொற்பத (முரா)

[சரணம்]

வனமலர்க் குழலார் முல்லை ஆயர்குல
மங்கையர் மகிழுங் கண்ணன்
வளருந் துளவமணி மார்பன் புவியனைத்தும்
வணங்குமா முகில் வண்ணன்

அனவர தமிலக்கு மணனின் றமிழ்த்தாரணி
அங்கையிலி லங்கிடும்வெண் சங்கமுடையான்
ஆதிமூலமென்ற அத்தியி னுயிர்க் காவலன்
அந்தரர்நி ரந்தரம்ப ணிந்திடுமு
யர்ந்ததிரு (முரா) (66)

---

(இராகம் - சுருட்டி - தாளம் - ஆதி.)

[பல்லவி]

கோகுல பால முகுந்தா அரிகோவிந்தா
கோபியர் கொஞ்சும் வைகுந்தா (கோ)

[அனுபல்லவி]

ஆகுலந் தவிர்த்துன்றன் - அருண்மல ரடியிணை
அனுதின முந்துதிக்கும் நினைவெனக்
கருளுவாய். (கோ)

[சரணம்]

மாகனகம் மகளிர் மண்ணின சையனைய
போகஞ் சதமென் றெண்ணிப் பூவிலுனைமறந்தேன்
நாகம் மருள் அரிய யோக மிகுங் கருட
வாகனனே நீவந்து வரமெனக் கருளுவாய் (கோ) (67)

——

## திருமகள் துதி.

[இராகம் கேதாரகௌளம் தாளம் ரூபகம்]

*[பல்லவி]*

தேவியுன்றன் கடைக்கண் ணோக்கித்
திருவருள்தருவாய்-திலக நாமதுளவமார்பன்-(தேவி)

*[அனுபல்லவி]*

பாவிலுன்னை மேவிப்போற்றும்
பக்தன்மேல்—நித்தமும்
பரவையின்கண்
பிறவிகொண்ட (தேவி)

---

67 ஆவது பாடல் : 3 ஆவது வரி ; ஆகுலம் - துன்பம்.

*[சரணங்கள்]*

1 ஆவலோடுன் சேவை நேர
அடியன் எனது மிடிமை தீரக்
காவலாய்நின் கருணைகூரக்
கலக்கமில்—இலக்குமி
கனக வாரி
தனகு மாரி (தேவி)

2 விண்ணவர்துதி நண்ணும்வேத
மன்னவர்மகிழ்ந் தெண்ணும் போதப்
பண்ணிலக்குவன் பாடுங்கீதப்
பாவையாள்—பூவைநேர்
பவளவண்ணப்
பதும பீடத் (தேவி) (68)

——

## பழனி முருகன் துதி.

[இராகம்-தேவகாந்தாரி-தாளம்-ஆதி]

*(பல்லவி)*

ஆவினன்குடி முருகா (ஆ)

*(அனுபல்லவி)*

தேவிகுமாரா—திகழ்கடம்பாரா
ஜெயமயில்வீரா—திருவருள்தாராய் (ஆவி)

---

68ஆவதுபாடல்: 5 ஆவதுவரி: பரவை-கடல்
,, 17 ஆவதுவரி: பவளவண்ணம்-சிவப்புநிறம்
,, 18 ஆவதுவரி; பதுமபீடம் - தாமரை ஆசனம்.

*[சரணம்]*

பாவலனுகிய பரசிவபோதனே
பரவுநர்க்கருள்தரும் பனிமலர்ப்பாதனே
கூவுசெஞ் சேவலங் கொடிகொள்விஞேதனே
குணமிகு ஞானசண் முகமணி நாதனே(ஆவி) (69)

——

## பழனி முருகப் பெருமானின் மீது பாடிய

### சிறப்புப் பாடல்.

**[இராகம் - அடாணு- தாளம் ரூபகம்]**

*[பல்லவி[*

பழனிநாதா—பரமபோதா (பழ)

*[பல்லவித்தொடர்]*

1 பக்தர்க ணித்தமு நத்திம
னத்திலி ருத்திவ முத்துயர்

2 பணிமால்மரு மகனேகிளர்
அணிவேலுறு கரனே வளர் (பழ)

3 பரிவுடனடி யவருலகினிற்
றெரிவுறஅனு தினம்பரவிடும் (பழ)

4 பங்கம் மங்குங் கலைவளர்
துங்கம் பொங்குந் திருமிகு (பழ)

5 பண்டைய இயலிசை நாடகத்
தண்டமிழ் மொழிக் கிறையாகிய (பழ)

6 பாவூர் அருட்கலை வளர்தரு
வேலூர் இலக்குவ னுரைதிரு (பழ)

7 பாசபந்த வாசனைசேர் மோசமுறும்
ஆசையெனும் மாசறுக்குந் தேசிகநற் (பழ)

8 பளிங்குமணி மண்டபமுன்
விளங்கு முனி வரரமரர்
இலங்குபுடை சூழ்தரவே
துலங்கு மயின் மிசையமரும் (பழ)

*[அனுபல்லவி]*

அழல் விழிசிவ னருள் பொற்பாதா
அமரர் போற்றும் அதிவினோதா (பழ)

*[சரணம்]*

அழ கிய விரி மலர் செறி குழ
லயில் விழி குற மக ளணை விரற்
கழலணி யிளங் குமரனே நின்
கருணை தாராய் - தருணம் நேராய்
கனிவார் நனிமனனே - கமழ்மங்கலகுணனே
இனிதார் கன தனனே—எழில்பன்னிருகரனே
காவலனே—நாவலனே
பாவலனே—சேவலனே
கஞ்சத்துறை அயனைச்சிறை
அஞ்சத் தனி வைத்தவனே
காரண காரிய நாயக
பூரண மானவி வேகனே
தீரகெம் பீரஒய் யாரசிங்
காரவு தாரவை போகனே

கதியே தருவாய் கவின்மா மணியே
விதியே பிறவி வினைதீ ரினியே
கந்தஞ் சிந்துஞ் செந்தேன் பைந்தண் மலர்மார்பா
அந்தம்முன் முதலகல்வே
தா — படிபி
தா — உமைசு
தா — கிருபை
தா — எழில்கொள் (பழ) (70)

——

## முருகன் துதிப்பாடல்.

*(பல்லவி)*

(இராகம்-சுருட்டி-தாளம் ஆதி)

வாழ்வெனக் கருள்முருகா – நித்தியானந்த
மாமுகில் வண்ணன் மருகா (வாழ்)

*[அனுபல்லவி]*

தாழ்சடைமுடிமிசை – தவழும் பிறைசூடிய
சங்கரன்புதல்வனே – இங்கென் துயர் நீக்கிநல் (வாழ்)

*[சரணம்]*

ஆழ்கடற்றுரும்பென அஞ்ஞானத்தில் மிதந்து
அறிவின் நிலைதவறி அல்லலுற்றதுபோதும்
சூழ்வினையால்வருமென் ஊழ்வினையைத் தவிர்த்துன்
சுந்தரமானபதம் சந்ததமும் மறவா (வாழ்) (71)

## திருச்செந்தூர் முருகன் சிறப்புப் பற்றி

### நெஞ்சறிவுறுத்தல்

[இராகம்-இந்துஸ்தான் காபி-தாளம் ஆதி]

*[பல்லவி]*

செந்தூர் முருகன் பதமே—துதிநிதமே
செந்தூர் முருகன் பதமே
தினமுநன் மனமேநின்
நினைவிற் பதிசதமே— (செந்)

*[சரணனுபல்லவி]*

1 சுந்தர மேவிய சோதி சொரூபன்
தூயவி லாசபஞ் சாட்சர தீபன்
இந்திர தேவசே ஞதிப பூபன்
இறை நுரை வரையறை
திரை நிறை கடற்கரைச் (செந்)

2 செந்தமிழ்ப் பாக்கடற் றிளைக்குமுல்லாசன்
தெரிதரும் புலவர்கண் மனமலர் வாசன்
சந்ததம் போற்றிடுந் தாசரின் நேசன்
சகலபுவன மெங்கும்
மகிழ்வுடனிறை திருச் (செந்)

3 இங்கித மாமயி லேறுந் தயாளன்
ஏதம கற்றுமுமை யீஸ்வரி பாலன்
செங்கர மேந்திய ஜெயவடி வேலன்
தெரு ளிறு மிரு ளவு
ணர்களினமற வரு (செந்)

4 தென்புடைத் தண்டமிழ் வளர் பணியாற்றும்
தேமிகு மிசைகமழ் பாமலர் சாற்றும்
அன்பனிலக்குமண னனுதினம் போற்றும்
அருண்முக குருபர
சரவணபவ குக (செந்) (72)

---

## முருகக்கடவுள் சிறப்புப்பாடல்

[இராகம்-அமீர்கல்யாணி-தாளம் ஆதி]

*[பல்லவி]*

கடம்பனையே தேடிக்
கண்டு களிப்போம் பாடிக் (கட)

*[அனுபல்லவி]*

திடங்கொள் அவுணர்தம்மைச்
செருவி லொழித்த எழிற்
றடங் கயற் கண்குஞ்சரி
தன்னை மணந்த தளிர்க் (கட)

*(உரைநடைத் தொடர்)*

கானமயிலேறிடுங் கண்ணியன் புண்ணியன்
கருணைப்ர வாக தீபன்
வானவர் தானவர் மகிதலர் முனிவரர்
வாழ்த்துமகிமைப்ர தாபன்

---

72ஆவது பாடல். 8 ஆவது வரி. இறை-கடவுள்.
" " நுரை-நீர்க்குமிழித் தொகுதி.
வரையறை- எல்லை.

[பாடல்]

கள்ளவிழ் மலர்க்கூந்தல்
வள்ளி மகிழுஞ் சீலன்
தெள்ளு தமிழ்க்குகந்த
சிக்கல்சிங் கார வேலன் (கட)

[உரைநடைத்தொடர்]

தண்மலர்ப் பிரமனைக் குட்டியே சிறையிட்ட
சண்முகன் சத்திசேயன்
வெண்மதி யணிந்தசீ ரரனிடம் பிரணவ
மெய்ப் பொருளுரைத்த தூயன்

[பாடல்]

தனயனிலக்கு மணன்
சாற்றுந் திருக் காங்கேயன்
அனுதினமும் பரவும்
அன்பர்கட்குச் சகாயன் (கட) (73)

——

## ஸ்ரீ முருகக்கடவுள் வருகையை வேண்டிப் பாடியன.

[இராகம் சுருட்டி- தாளம் ஆதி.]

(பல்லவி)

1 வாவா வடிவேல் முருகா—மயிலிலேறி
வாவா வடிவேல் முருகா.

---

73 ஆவது பாடல், 4 ஆவது வரி: செரு—போர்

*சரணுனுபல்லவி*

1 ஓவா தமரர்துதி மூவாதுறும் பழனி
தேவா பாவக் கடலுண் மேவா வரமருள (வா)

2 மாறுகொண்டவசுரர் நீறுபட் டேயழிய
வீறுகொண்டேயெழுந்த ஆறுமுகவா ஓடி (வா)

3 தீனர்க் கருள்புரியும் ஞானதயாபரனே
கானக் குறத்தி வள்ளி மானின் மனோகரனே
(வா)

4 நீலத்திரைகொழிக்குங் கோலக்கடல் சூழ்புவி
மேலிச்சேயனுக்கருள் பாலித்திடவே ஓடி (வா)

5 ஞாலந் தனிலுனையெக் காலத்தினும் மறவாப்
பாலனிலக்குமணன் பாடுந் தமிழ்க்கியைந்து
(வா) (74)

——

[இராகம் அடாணு தாளம் ரூபகம்]

*[பல்லவி]*

(2) வருக கான மயிலி லேறி
மறுவி லாத கருணை வாரி (வரு)

*[அனுபல்லவி]*

பெருகு நேய உரிமை கோரி
பிரிய மாகு மெனது நேரில் (வரு

*[சரணம்]*

அரு மறை புகழ் பெறு முருகனே
அமு தனை யத மிழி னருகனே

---

74 ஆவது பாடல் : 3 ஆவது வரி : ஓவா-ஒய்வில்லாது
" " மூவா-அழிவில்லா.

திரு மக ளூறு மரி மருகனே
தினை யுண வினின் மிகு பிரியனே
சிந்தைக்கினியவனே—தந்தைக் குருபரனே
சந்தக்குறவரனே–சைலத்துறைபவனே
தாசனிலக்குவன் - நேசமுடன் பணி
தற்பரனே – அற்புதனே
பொற்புறுநல் விற்பனனே (வரு) (75)

——

## முருகன் துதிப்பாடல்.

[இராகம்–கல்யாணி–தாளம் ஆதி]

*[பல்லவி]*

குருபரகுகா
குமரா எனையாள் — (குரு)

[அனுபல்லவி]

தெருணிறைமகா ஜெயவேல்முருகா
பொருணிறைமறைப் புனிதசண்முகா (குரு)

[சரணங்கள்]

1 திருமயிலின்மேல் வருசரவணா
திசைமகிழுமின் னிசையாபரணா
முரஹரிதவ மருகனேபவ
முதிர்வினையறக் கதியருளுவாய் (குரு)

2 கமழ்மதுமலர்க் கழலிணையுவந்
திமிழ்திரையமிழ் தினுமினியசெந்
தமிழிசைமலர்ச் சரமணிந்திடும்
தனயன்லக்ஷ்மணன் அனுதினந்துதி (குரு)(76)

---

75 ஆவதுபாடல்: 6ஆவதுவரி அருகன் - தோழன்
,, 10ஆவதுவரி சைலம் - மலை
76 ஆவது பாடல் : 11 ஆவது வரி ; சரம் - மணிவடம்.

## நெஞ்சறிவுறுத்தல்.

[இராகம் - அரிகாம்போதி - தாளம் ஆதி]

*[பல்லவி]*

வீண் மயக்கங் கொள்ள வேண்டாம் - நெஞ்சே
வீண் மயக்கங் கொள்ள வேண்டாம் - மருள்
மேவும் பூதல வாழ்வு சதமென்றெண்ணி - [வீண்]

*[அனுபல்லவி]*

ஊண்பணி உடைகள் உயர்மனை வயலணி
பூண்முதலிய செல்வப் பொருளுறுதியென் றெண்ணி
- (வீண்)

*[சரணங்கள்]*

1 குண மேவியபல மக்கள் பெற்றாலும்
கோமகனாய் முடி சூடலுற்றாலும்
தணன்மேல் நடந்திடும் வினயங்கற்றாலும்
சாவது நிச்சயமாம் சடலந்தனை நம்பிநீ (வீண்)

2 மறையா கமஞ்சொலும் மார்க்கத்தை நாடி
மகிழ்ந்திலக் குவன்துதி வண்பிறை சூடி
இறைநாதன் கழலில் இரண்டறக் கூடி
இன்பம் நுகர்வதொன்றே துன்பமில்லை உலகில்
(வீண்) (77)

——

## வேகுப்பட்டி என்ற வேவுமாநகர்
## ஸ்ரீ ஏனமாரி அம்மன் பூவிழாத் துதிப்பாடல்.

[*சிலைஎடுத்தான் ஒரு சின்னப் பெண்ணுக்கு என்ற திரைப்படப் பாட்டிசைத் தழுவல்.*]

[கண்ணிகள்.]

1 மணிமலர்த் தாள்ஏன மாரி அன்னைக்கு
மாமணப் பூவிழாக் காண்போம் இன்றைக்கு
புனிதவே லூர்த்தாயைப் போற்றுமன்பர்க்கு
புவியினிற் குறையென்ப தில்லையென்றைக்கும்
(மணி)

2 தேவியின் பேரருள் தேடிநடப்போம்
தேமலர் சொரிந்துபா மாலைதொடுப்போம்
மாவிளக்கொடு பொங்கல் வைத்துப்படைப்போம்
மகிழும்பொன் ஊருலாக் கண்டுதுதிப்போம்
(மணி)

3 இயலிசை நாடகம் என்னும் பெண்ணுக்கு
எழி லொளி தருமவள் இன்பக்கண்ணுக்கு
மயல்தவிர்த் தாண்டிடும் புகழ்விண்ணுக்கு
வளரச் செய்யும்இந்த வண்ணப் பண்ணுக்கு
(மணி)

4 மலைமக ளாய்வந்த மாபெரு மங்கை
வலவன் துளவமணி மார்பினன்தங்கை
அலகைக் கொடியுயர்த்தும் ஆரணநங்கை
அடிமுடி சூடியே கூப்புவோம் செங்கை (மணி)

5 மழைமுகில் நெல்வளன் வாரிவழங்க
மகிதல முழுதும் நன் மாண்புற்றிலங்க
இளைஞர்கள் மன்றமுயர்ந் தென்றும்விளங்க
இலக்குவன் இசைத்தமிழ் எங்கும்முழங்க.
(மணி) (78)

——

## வேகுப்பட்டி என்ற வேவுமாநகர்

# ஸ்ரீ ஏனமாரி அம்மன்

### பூவிழாத்துதிப்பாடல்.

[நெஞ்சமுண்டு நேர்மையுண்டு ஓடு ராஜா என்ற
திரைப்படப் பாட்டிசைத் தழுவல்.]

*[கண்ணிகள்]*

1 எங்கும்புகழ் பொங்கும்வேவூர் ஏனமாரி—உன்றன்
ஏவலாற் பொழிகுக நல் வானமாரி

அங்கயற்கண் அம்மையேநின் ஞானமாரி-சுரந்(து)
ஆண்டருள் புரிகுவாய்பொன் தானமாரி (எங்)

2 பூவும் பாவுந் தூவும்விழாப் போற்றி எடுத்து-மருட்
புன்மை சான்ற தொன்மைவினை போகத் தடுத்து
ஆவல்கூடுன் சேவை காணும் ஆர்வந் தொடுத்து-
மகிழ்ந்(து)
அன்புசெயும் மக்கட் கருள் நல்காய் அடுத்து (எங்)

3 வண்ணப் பொங்கல் இட்டுவாழ்த்தும் மக்கள்
மகிழ்ச்சி–திரு
மாவிளக்கங் கேற்றிவைக்கும் மாதர் நெகிழ்ச்சி
எண்ணில இசைநாடகம் என்னும் நிகழ்ச்சி–
எல்லாம்
ஏற்றிடும் பெருந்திருநா ளின்பப் புகழ்ச்சி (எங்)

4 தேவி உன்பேர் சொல்ல நோய்கள் தீரும் ஆகம்
—உயர்
செல்வங் கல்வி யாவும் வந்து சேரும் யோகம்
பூவிற் சூழும் தாப தூபப் பாப மோகம்–தம்மைப்
போக்கிநன்மை ஆக்கித்தரும் புண்ய போகம் (எங்)

5 செய்ய தமிழ்வையம் போற்றுந் தேவி நீயே-எங்கள்
சென்ம பாவந் தீர அருள் செய்குவாயே
ஐயை சிவை அந்தரிநின் ஆர்வச் சேயே-தமிழ்
அன்பன் லக்ஷ்மணன் சொன்மாலே சூடுந்தாயே—
(எங்) (79)

——

## முருகன்மீது பக்திக் காதல் கொண்ட ஒருபெண் தன் தோழியை நோக்கி முருகன் சிறப்பைப்பற்றிக் கூறுமுகத்தான் ஆக்கப்பெற்றபாடல்.

[இராகம் - காம்போதி –தாளம் – ரூபகம்.]

[பல்லவி.]

கண்ணன்கார் முகில் மணி
வண்ணன் மருகன்றன்னேக்
கண்டாயோ தோழி சொல்வாய் (கண்)

[அனுபல்லவி]

எண்ணுமென் மனத்தன்பை
உண்ணும் அதிவினேதன்
ஏழுல கமும் போற்றி
வாழ்த்துஞ்சண் முகநாதன் (கண்)

---

79 ஆவது பாடல் : 10 ஆவது வரி : மாதர் நெகிழ்ச்சி—பெண்களின் உருக்கம் (அன்பு)

,, 13 ஆவது வரி–ஆகம்–உடல்

,, 15 ஆவது வரி–தாபதூபம்-துன்பமாகிய புகை

*[சரணங்கள்]*

1 நண்ணும்அன் பர்கட்கருள் நாட்டம்பன்
னீருடையான்
நங்கையெனை அணைத்த செங்கையீ ராறுடையான்
எண்ணில்வே தப்பாதுகம் ஏற்கும் பாத நடையான்
இடர்கொள் வினைசெய் குன்றம் எறியுங்கூர்
வேற்படையான்—(கண்)

2 அல்லும் பகலும் உள்ளத் தில்லில் இருப்பேனென்று
கல்லுங் கசிந்துருகுஞ் சொல்லா லெனைமயக்கிப்
புல்லிக்கலந்து சென்ற புண்ணியனின்னும் வர
இல்லையென் செய்வேனந்தோ ஏழையெங்ஙன
முய்வேன்—(கண்)

3 முனிவர்வா னவர்துன்பந் தணியுமா றவுணர்கள்
முழுதும் ஒழியும்போரை முடித்தற்கே கினுனே
பெண்
இனிய குறமகண்மே லிச்சை கொண்டு சென்றுனே
இலக்கு மணன்செந்தமி ழிசையோர்ந்தெங்கு
நின்றுனே (கண்) (80)

——

(போற்றித் தமிழ்மலர்ப் பகுதி நிறைவு பெற்றது.)

---

80 ஆவது பாடல்: 10 ஆவது வரி: பாதுகம்–பாதுகை.
,, 14 ஆவதுவரி: புல்லி–(புல்லுதல் என்பதன்திரிபு) தழுவி

——

# வாழ்த்துத் தமிழ் மலர்.

## தமிழ்த் தாய் வணக்கம்.

*[எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்]*

மலையினிற் பிறந்து வளமிகுஞ் செழியர்
மாண்பினிற் கிடந்துநீள் வைகை
அலையினிற் றவழ்ந்து கலைவளர் சங்க
அரங்கினி லிருந்துபே ரழற்கண்
சிலையினில் நின்று புலவரின் நெஞ்சத்
திணையினில் நடந்துசீ ரோங்கும்
நிலையினில் நிறைந்து வளர்தமிழ்த் தாயை
நித்தமும் வணங்குதும் நினைந்தே (1)

——

1 ஆவது பாடல் : 5 ஆவது வரி : சிலையினில் – கல்வடிவில்.
,, 6 ஆவது வரி : திணை – இடம்.

## மகிபாலன்பட்டி பண்டிதமணி
## உயர்திரு மு. கதிரேசச் செட்டியாரவர்கள்

*"மகாமகோபாத்யாய" என்ற பெரும் பேராசிரியப் பட்டம் பெற்றமை குறித்து அவர்களைப் பாராட்டி அவர்கட்கு அக்காலத்தில் எழுதி அனுப்பிய*

## வாழ்த்துப் பாக்கள்.

*[நேரிசை வெண்பா]*

1 பேசரிய மாபெரும்பே ராசிரியப் பேர்பெற்றிக்
காசினியி லோங்குங் கதிரேச — மாசில்
அணியே புலவரகத் தார்பண் டிதமா
மணியேநீ வாழ்க மகிழ்ந்து. (2)

2 அன்புற்ற கோநிற் கருள்சிறப்புப் பொற்பெயர்கேட்
டின்புற் றுவகைப்பே றெய்தினன்யான்-முன்புற்றே
வந்துபா ராட்டி மகிழ்ந்து வரமுயன்றேன்
சந்தர்ப்ப நேர்விலை தான். (3)

3 மன்னன் அருள்வாழ்க மகாமகோ பாத்யாய
உன்னதப்பேர் கொண்டொளிரும் உத்தமனே —
இன்னும்நீ
பட்டம் பதவி பலபெற்றே பல்லாண்டு
திட்டமுடன் வாழ்க சிறந்து. (4)

——

3 ஆவது பாடல் : 1 ஆவது வரி : கோ - அரசுத்தலைவர்.

*சைவசித்தாந்தச் செல்வரும் செந்தமிழ் அன்பரும் இந் நூற்*
*சிறப்புரிமை பெற்றவரும் தமிழ்ப் பெருங்கொடை*
*வள்ளலும் ஆகிய*

## தேவகோட்டை சேவுகன் அண்ணுமலை
## கலைக் கல்லூரியின் தலைவர்

# உயர்திரு உ. ராம. மெ. சுப. சேவு. அண.
# அண்ணுமலைச் செட்டியார், B. Com. அவர்கள்

**பேரிற் கூறிய வாழ்த்துப் பாக்கள். (7-11-71)**

*[நேரிசை வெண்பா]*

1 பூமகிழும்அண்ணு மலையென்ற பொற்பெயர் கொள்
கோமகனே வாழ்க குபேரனைப்போல் – பாமகளாம்
நாமகளும் பூமகளும் நல்லாசி தந்தொளிர
மாமகனுய் என்றும் மகிழ்ந்து. (5)

*[கலிநிலைத்துறை]*

2 குலவு மாதன வணிகரின் மரபினக் குரிசில்
நிலவு லாவிய முடியினன் அருளொடு நிதமும்
புலவ ராதிய மக்களைக் கலைகளைப் புரக்கும்
தலைவ ரான அண்ணுமலை வாழிய தழைத்தே
(6)

---

5 ஆவது பாடல் : 3 ஆவது வரி : பூமகள் – இலக்குமி.
6 ஆவது பாடல் : 1 ஆவது வரி : குலவு – கூடி மகிழ்கை.

*[கட்டளைக் கலித்துறை]*

3 கொள்ளல் கொடுத்தல் வணிகத்தில் தேர்ந்த
குலமகனர்
தள்ளல் இணைத்தற் றுறையினில் மேதைத்
தலமகனர்
உள்ளல் உவத்தற் றுறைக்கண் உணர்வுற்
றுதவுகின்ற
வள்ளல் அண்ணுமலை வாழிய நீடு
மகிதலத்தே. (7)

*[அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்]*

4 குருவளங்கொள் எழில்நகராம் குலவுதமிழ்ப்
புரிதேவ கோட்டையின்கண்
பெருவளங்கொள் சேவகஅண் ணுமலைவேள்
பொற்பெயரால் பிறங்கி ஓங்கும்
உருவளங்கொள் அரியகலைக் கல்லூரி
தோற்றுவித்த உலகச் செம்மல்
தருவளங்கொள் திருஅண்ணு மலைஅன்பர்
வாழியநீள் தரணி மீதே (8)

*[எழுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்.]*

5 கொங்கலர் கமல முகைவிரிந் தன்ன
குளிரெழில் முழுமதி முகமும்
திங்களின் ஒளியை நிகர்தரு பொன்னின்
திருவுரு மேனியுந் திரண்ட

---

8 ஆவது பாடல் : 1 ஆவது வரி : குருவளம் – ஆசிரியத் தன்மை, பெருமை
,, 4 ஆவது வரி : பிறங்கி – விளங்கி.
,, 7 ஆவது வரி : தருவளங்கொள் – கற்பகத் தருவைப் போன்ற வளமுடைய
9 ஆவது பாடல் : 1 ஆவது வரி : கொங்கு – பூந்தாது, தேன்.

கங்குலாம் மிடிமை தெறக்கொடை கொடுக்குங்
　　கரங்களுங் கொண்டொளிர் கனக
மங்கல வேள்அண்ணுமலை வள்ளல்
　　வாழிய வாழிய மகிழ்ந்தே. (9)

*[நேரிசை வெண்பா]*

6 அண்ணு மலையார் அவர்தங் குடும்பத்தார்
மண்ணுளும் மன்னவர்போல் வாழியவே —
　　　　　　　　　　　　விண்ணுளும்
உம்பரிறை போற்ற உலகமெலாம்
　　　　　　　　　　　　வாழ்த்திசைப்ப
எம்பெருமான் ஆசி இணைந்து. (10)

——

*கலைத் தந்தையும் தமிழ்ப்பெரு வள்ளலுமான*

## உயர்திரு கரு. முத்து, தியாகராசச் செட்டியாரவர்கள் பேரிற் கூறிய

**வாழ்த்துப்பாக்கள்.**

*[அளவடியான் வந்த கொச்சகக் கலிப்பா.]*

1 நீரார்ந்த கடலுடுத்தும் நிலமகளுக் கணிதிலகப்
பேரார்ந்த தமிழ்நாட்டின் பெருநகர்நன் மதுரைபல
ஊரார்ந்த தலங்கடொறும் உயர்கல்வி நிலைநிறுவிச்
சீரார்ந்த புகழ்கொழிக்கும் தியாகேசர் வாழியவே.
(11)

9 ஆவது பாடல்: 5 ஆவது வரி : மிடிமை தெற – வறுமை நீங்க

*[கழிநெடிலடியான் வந்த அறுசீர் ஆசிரிய விருத்தம்]*

2 பூமணக்கும் புகழாளர் பொருள் மணக்குங்
கலையாளர் புலவோர் போற்றும்
பாமணக்குங் கொடையாளர் பயன்மணக்குஞ்
செயலாளர் பதுமப்பைம்பூந்
தேமணக்குந் திருவாளர் சிவம்மணக்குங்
கருமுத்துத் தியாக ராசர்
மாமணக்குங் கலையன்னை இராதாநன்
மனைவியுடன் வாழ்க மாதோ. (12)

*[கழிநெடிலடியான் வந்த எழுசீர் ஆசிரிய விருத்தம்]*

3 மங்கலம் பெருகும் மணிநகர் மதுரை
வளம்மலி மாநிலந் தோறும்
அங்கயற் கண்ணி அருளினல் மக்கட்(கு)
அரியநல் வேலைவாய்ப் பளிக்கும்
தங்கநூல் ஆலை அதிபராய் நாட்டின்
தலைவராய்த் தமிழ்முடி சூடிப்
பொங்குபூந் தியாக ராசரிப் புவிக்கண்
புகழொடும் வாழிய பொலிந்தே. (13)

---

12 ஆவது பாடல் : 5 ஆவது வரி : தேமணக்கும் – தெய்வத்தன்மை பரிமளிக்கின்ற
" " சிவம் – இறையருள்

*[கழிநெடிலடியான் வந்த எண்சீர் ஆசிரிய விருத்தம்.]*

4 மலைத்தந்தை மகளிடங்கொள் அன்பே போல
மக்களிடத் தன்புகொளும் மனத்தார் கன்னல்
சிலைத்தந்தை துளவமணி திருமா லன்ன
சிறப்புறுமெய் அறங்காக்குந் திறத்தார் செல்வக்
கலைத்தந்தை கருமுத்துத் தியாக ராசர்
கனிவுமிகுந் துணைவியொடு கவிஞர் நெஞ்சில்
நிலைத்தந்தை யெனப்புகுந்து நெகிழ்ந்து நின்றார்
நீடூழி வாழ்கஇவர் நிறைந்து நன்றே (14)

*[நேரிசை வெண்பா]*

5 மாவேந்தர் வாழ்த்தி வளர்த்த தமிழணங்கைப்
பூவேந்தும் பொற்பணியால் போற்றுபவர் —
மூவேந்தர்
தம்மைநிகர் தெய்வத் தகைசால் தியாகேசச்
செம்மலிவர் வாழ்க சிறந்து (15)

6 செல்வப் பெருக்கும் செவிப்பெருக்குஞ்
செந்தமிழ்நூற்
கல்விப் பெருக்குங் கவிப்பெருக்கும் —
மல்கியொளிர்
செம்பதுமச் செல்வி இராதா தியாகேசத்
தம்பதியர் வாழ்க தழைத்து. (16)

7 ஊக்க முடையார் ஒளியுடையார் ஒண்பெருஞ்சீர்
ஆக்க முடையார் அருளுடையார் — தீர்க்கநிலை
மிக்க தியாகேசர் மேவுதமர் அன்புமனை
மக்களுடன் வாழ்க மகிழ்ந்து. (17)

---

14 ஆவது பாடல் : 2 ஆவது வரி : கன்னல் – கரும்பு.
,, 7 ஆவது வரி : நெகிழ்தல் - (மனம்) இளகுதல்.
17 ஆவது பாடல் : 2 ஆவது வரி : தீர்க்க நிலை – அறிவுத்தெளிவாகிய நிலை.

*மேலைச்சிவபுரிச் சன்மார்க்க சபைச் செயலாளரும் கல்லூரிக் குழுத் தலைவரும் ஆகிய*

## உயர்திரு ஆ. நாகப்பச் செட்டியார் அவர்களை "பொன் அண்ணல்" என்ற சிறப்புப் பெயரால்

**பாராட்டிக் கூறிய வாழ்த்துப்பா.**

*[நேரிசை வெண்பா]*

சீரார்நன் மேலைச் சிவபுரியிற் செல்வமணப்
பேரார்ந் திலங்கும் பெருமகனார் — பாராளும்
மன்னர்நேர் நாகப்ப வள்ளலார் வாழியவே
பொன்அண்ணல் பொற்பேர் புனைந்து. (18)

——

*உயர்திருவாளர் மகிபாலன்பட்டி சி. ராம. இராமசாமிச் செட்டியாரவர்களின் புதல்வர்*

## அன்புமிகு நாகப்பனாரவர்களை

**'தனதன்' என்ற சிறப்புப் பெயரால் பாராட்டிக் கூறிய வாழ்த்துப்பா.**

*[நேரிசை வெண்பா]*

திருஇராம சாமியெனுஞ் சீராளர் தந்த
அருண்மேவு நாகப்ப அண்ணல் — பெருகி
மனதினிக்கும் அன்புமனை மக்களுடன் வாழ்க
தனதனெனும் பொற்பேர் தரித்து. (19)

——

*மேலைச்சிவபுரிச் சன்மார்க்கசபைத் தலைவர்*

## உயர்திரு வ. பழ. சா. பழ. சிதம்பரஞ் செட்டியாரவர்களை

### அன்பண்ணல் என்ற சிறப்புப் பெயரால் பாராட்டிக் கூறிய வாழ்த்துப் பாக்கள். (21-5-70)

*[நேரிசை வெண்பா]*

1 சீராரும் மேலைச் சிவபுரிக்கண் செந்தமிழ்ப்பூந்
தாராருஞ் சித்தாந்த சைவநெறிப் — பேரார்
மதம்பரப்புஞ் சன்மார்க்க மன்றத் தலைவர்
சிதம்பரவேள் வாழ்க சிறந்து. (20)

2 சிதம்பரவேள் செல்வர் திருவுடையார் ஈசன்
பதம்பரவும் மெய்யன்பர் பாரோர்க்(கு) —
இதம்புரியும்
அன்பண்ணல் என்ற அணிசிறப்புப் பேர்தாங்கி
இன்பமுடன் வாழ்க இனிது. (21)

——

*பொள்ளாச்சி*

## உயர்திரு நா. மகாலிங்கம், B. Sc., M. I. E., M. L. C

### அவர்கள் பேரிற் கூறிய வாழ்த்துப்பா. (7-11-71)

*[நேரிசை வெண்பா]*

அமிழ்தம் உகுதருசொல் அன்புநிறை அண்ணல்
இமிழ்கடல்சூழ் வையமெலாம் ஏத்தும் – தமிழ்மகனே
வாழியவான் செல்வ மகாலிங்க வள்ளால்நீ
ஊழிபல மேவி உயர்ந்து. (22)

---

20 ஆவது பாடல் : 3 ஆவது வரி : மதம் - சமயம், கொள்கை.

காரைக்குடி தமிழ்க்கடல்
## உயர்திரு ராய. சொக்கலிங்கனுர் அவர்கள்
பேரிற் கூறிய வாழ்த்துப்பா.

*[நேரிசை வெண்பா]*

அமிழ்தத் தமிழ்மொழியில் ஆய்ந்த புலமை
இமிழ்தருவான் சொல்லின் இனிமை – கமழ்ராய
சொக்கலிங்க அண்ணல் சுபம்பெற்று வாழியவே
மக்களெலாம் வாழ்த்த மகிழ்ந்து. (23)

——

காரைக்குடிக் கம்பன் கழக அமைப்பாளர்
## உயர்திரு சா. கணேசனுர் அவர்கள்
பேரிற் கூறிய வாழ்த்துப்பா.

*[நேரிசை வெண்பா]*

பூவின் புகழ்கம்பன் பொற்கழகந் தோற்றுவித்த
மாவன் தமிழ்ப்புலமை வாக்கினிமை - மேவும்பேர்
அன்பர் கணேசனுர் வாழ்க அவனியின்கண்
மன்பெருஞ்சீர் பெற்று மகிழ்ந்து. (24)

——

தருமபுர ஆதீன வித்துவான் பாலகவி வயிநாகரம்
தேவகோட்டை
## வே. இராமநாதன் செட்டியாரவர்கள்
பேரிற் கூறிய வாழ்த்துப்பா.

*[நேரிசை வெண்பா]*

உலகம் புகழ்இராம நாதர் ஒளிர்வான்
திலகத் தமிழ்ப்புலமைச் செல்வர் — அலகில்சீர்ப்
பாலகவி சித்தாந்த சைவநெறிப் பண்பாளர்
ஞாலமிசை வாழ்க நயந்து. (25)

## மதுரைப்பல்கலைக் கழகத்துணை வேந்தர் டாக்டர், மு. வரதராசனுர் அவர்கள்பேரிற் கூறிய வாழ்த்துப்பா

[நேரிசை வெண்பா]

பூவளரும் பொன்வரத ராச புலமைமிகும்
பாவலர்தம் நேச பலகலைதேர்—நாவலநீர்
நீடுழி வாழியஇந் நீணிலத்தின் ஆக்கமொடு
பீடுரும் பேறனைத்தும் பெற்று. (26)

——

அண்ணுமலை சர்வகலாசாலைத் தமிழ்த்துறைத் தலைவரும் பேராசிரியரும் மேலைச்சிவபுரிச் சன்மார்க்க சபையார் தந்த 'செம்மல்' என்றபட்டம் பெற்றவரும் ஆகிய

## உயர்திரு டாக்டர் வ. சுப. மாணிக்கனுரவர்களை "கலை அண்ணல்"

என்ற சிறப்புப் பெயரால் பாராட்டிக் கூறிய வாழ்த்துப்பா.

[நேரிசை வெண்பா]

பூவளனும் செம்மலெனும் பேர்வளனும் பொங்குதமிழ்ப்
பாவளனுங் கொண்டொளிரும் பண்பாளர்—
நாவளன்கொள்
மாணிக்க வேள்வாழ்க மன்னுகலை அண்ணற்பேர்க்
காணிக்கை ஏற்றுக் கனிந்து. (27)

---

26 ஆவதுபாடல் 4ஆவதுவரி: பீடு-பெருமை

மதுரைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைத் தலைவரும்
பேராசிரியரும் ஆகிய உயர்திரு

## அ. ச. ஞானசம்பந்தம் அவர்கள் பேரிற்

**கூறிய வாழ்த்துப்பா (17—10—71)**

*[நேரிசை வெண்பா]*

*சீருடையாய் அன்புத் திருஞான சம்பந்தப்*
பேருடையாய் வாழ்க பெருமையுடன்—ஏருடைய
செல்வநலன் கல்விவளன் தெய்வஅருள் சேரினைய
பல்வளன்கள் மல்கப் படைத்து. (28)

——

*மதுரை தியாகராசர் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவரும்*
*பேராசிரியரும் ஆகிய*

## டாக்டர் திரு, சுப. அண்ணாமலை எம். ஏ., எம். லிட்., அவர்கள்

**பேரிற் கூறிய வாழ்த்துப்பா.**

*[நேரிசை வெண்பா]*

பூவளன்கொள் விற்பன்னர்ப் பொறப்பட்டம்
பெற்றுயர்ந்த
நாவளன்கொள் ஆன்றதமிழ் நாயகனார் — மேவுசுப
அண்ணா மலையன்பர் அம்புவிக்கண் வாழியவே
விண்ணாள் இறைபோல் மிளிர்ந்து. (29)

——

29 ஆவது பாடல் : 1 ஆவது வரி : விற்பன்னர் - டாக்டர்.

*மதுரைத் தியாகராசர் கல்லூரித் தமிழ்விரிவுரையாளர்*

**வித்துவான், தமிழண்ணல், டாக்டர்,**

## இராம. பெரியகருப்பன் அவர்கள்

**பேரிற் கூறிய வாழ்த்துப்பா.**

*[நேரிசை வெண்பா]*

சொற்பொன் தமிழண்ணல் தொன்மைவிற் பன்னரெனும்
நற்பட்டம் பெற்றுயர்ந்த நாவலராம் – பொற்பூம்
பெரிய கருப்பப் பெருமகனுர் வாழ்க
அரியசிறப் பெல்லாம் அமைந்து. (30)

---

*உலகஞ் சுற்றும் தமிழரெனப் பெயர் பெற்றவரும் சோமலெ.*
*என்ற செல்லப் பெயரால் அழைக்கப் பெருகின்றவரும்*
*தமிழ்க் கலைஞருமாகிய நெற்குப்பை*

## உயர்திரு சோம. இலக்குவனர் B. A. அவர்களை

**'குரிசில்' என்ற சிறப்புப் பெயரால் பாராட்டிக் கூறிய வாழ்த்துப்பா.**

*[நேரிசை வெண்பா]*

பூமலர்முந் நீர்சூழ்ப் புவனமெலாஞ் சுற்றியவர்
சோமலெ என்றுலகோர் சொல்லுபுகழ் — நாம
இலக்குவனர் வாழ்க இனியதமிழ் மக்கள்
குலக்குரிசில் என்றபெயர் கொண்டு. (31)

---

31 ஆவது பாடல் : 4 ஆவது வரி : குரிசில் – தலைவர்.

## வேகுப்பட்டி

## உயர்திரு A. V. இராமநாதன் M. A. அவர்களை

*"அறிவண்ணல்" என்ற சிறப்புப் பெயரால் பாராட்டிக்கூறிய வாழ்த்துப்பா (17–5–70)*

*நேரிசை வெண்பா*

திருஇராம நாதரெனுஞ் செவ்வியபேர் கொண்டோர்
மருவும் அரியகலை வாணர்—பெருகும்
அறிவண்ணல் பேர்சூடி அம்புவிக்கண் வாழ்க
நெறிவளன்பொன் பெற்று நிறைந்து. (32)

——

## தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களைச் சிறப்பித்துப் பாடிய பாடல்கள்

*[கட்டளைக் கலித்துறை]*

(1) நவத்தினை ஊக்குமிந் நானிலவாழ்வு
நனிசிறக்கும்
பவத்தினைப் போக்கும் பரிபவம் நீக்கும்
பயன்பெருக்கும்
சிவத்தினிற் சேர்க்கும் அடிகளார் என்றபேர்
சேர்ந்திணைந்த
தவத்திரு தெய்வ சிகாமணி யார்க்கென்
சரணமதே. (33)

*[நேரிசை வெண்பா[*

(2) குன்றக் குடிக்குமரன் கோவேள் குகன்முருகன்
மன்றற் பதம்மறவா வாழ்வுடையார்—துன்றும்
மிடிகள்தீர் தெய்வ சிகாமணிப்பேர் மேவும்
அடிகளார்க்(கு) அர்ப்பணம் என் அன்பு (34)

——

## கோவிலூர் காசிவாசி
## (நடேசஅடிகளார்) சுவாமிகளின்

**அருட்பெருக்கை வாழ்த்திக் கூறியபாடல் (13—5—70)**

*[நேரிசை வெண்பா]*

பிறவி மயல்நீத்துப் பிஞ்ஞகன்ருள் சேர்வான்
துறவியியல் கொள்ளடியர் தூதர்—மறவினைதீர்
பூமிபுகழ் கோவிலூர்ப் பொற்காசி வாசியெனுஞ்
சாமிஅருள் வாழ்க தழைத்து. (35)

——

## மதுரை தியாகராசர் கலைக்கல்லூரி ஆராய்ச்சிப் பேராசிரியர், சித்தாந்த கலாநிதி, உரைவேந்தர்
## ஔவை சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள்

**பேரிற்கூறிய வாழ்த்துப்பா**

*[நேரிசை வெண்பா]*

பூவளனுர் ஔவைப் புலவர் துரைசாமிப்
பாவலனுர் சித்தாந்தப் பண்புநெறிக்—காவல்
தரைவேந்தர் ஆய்வுத் தமிழ்வேந்தர் பன்னூல்
உரைவேந்தர் வாழ்க உயர்ந்து. (36)

——

அண்ணாமலைபல்கலைக்கழகத்துணைப் பேராசிரியராக இருந்து ஒய்வுபெற்றவரும் மதுரைப் பல்கலைக்கழக ஆராய்ச்சியாளரும் ஆகிய முத்தமிழ் மணி வித்துவான் உயர்திரு

## மு. அருணாசலம்பிள்ளை அவர்கள்

பேரிற் கூறிய வாழ்த்துப்பா

*[அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்]*

உலகமகள் எழில்வதனத் திலகமெனும்
    பொலிவுமிகுந் தோங்கும் பாண்டித்
தலமதுரை வளர்தருபல் கலைக்கழக
    விற்பனப்பூந் தமிழாய் வாளர்
பலகலைதேர் பெரும்புலவர் முத்தமிழ்மா
    மணியெனும் பொற்பட்டம் பெற்றோர்
இலகுபுகழ் இனைய அருணாசல வேள்
    வாழியசீர் இயைந்து நன்றே. (37)

——

மதுரைத் தியாகராசர் கல்லூரி விரிவுரையாளர்

## உயர்திரு, சங்கரநாராயணனுர் அவர்கள்

பேரிற்கூறிய வாழ்த்துப்பா 17—10—71)

*நேரிசை வெண்பா*

புகழுஞ் செழியதமிழ்ப் பொற்புலவர் போதந்
திகழும் இசைப்புலமைச் செல்வர்—நெகிழுளமார்
சங்கரநா ராயணவேள் வாழ்க தரணிமிசை
மங்கலங்கள் பொங்கி மகிழ்ந்து. (38)

——

மதுரைத்தியாகராசர் கல்லூரித் தமிழ்விரிவுரையாளர்
முத்தமிழ்மணி வித்துவான் உயர்திரு

## கவிஞர் கதி. சுந்தரம் அவர்கள் பேரிற்கூறிய வாழ்த்துப்பா.

*[நேரிசை வெண்பா[*

சொல்லினிமை மிக்குடையார் தூய தமிழ்மொழியில்
நல்ல புலமை நயமுடையார்—மல்லல்
விரவுகதி சுந்தரவேள் மேன்மையெலாம் பெற்று
மரகதன்போல் வாழ்க மகிழ்ந்து. (39)

——

## மதுரைத் திருவள்ளுவர் கழகத் தலைவர் உயர்திரு பண்டித மீ. கந்தசாமிப் புலவரவர்கள்

பேரிற் கூறிய வாழ்த்துப்பா.

*[நேரிசை வெண்பா]*

பூவளனுர் பொற்கந்த சாமிப் புலவரெனும்
பாவலனுர் வாழியஇப் பாரின்கண்—கோவனச
வெண்மலராள் செங்கமலத் தண்மலராள் பொங்குமெழிற்
கண்மலரால் நோக்கக் கனிந்து. (40)

——

---

39 ஆவதுபாடல்: 4 ஆவதுவரி மரகதன் குபேரன்

40 ஆவது பாடல்: 3 ஆவதுவரி; வெண்மலராள்-கலைமகள்

*மேலைச்சிவபுரிக் கணேசர் செந்தமிழ்க்கல்லூரி*
*முதல்வரும் புலவருமாகிய உயர்திரு*

## வெ. சு. அழகப்பனுர் M. O. L. அவர்களை

**அருளண்ணல் என்ற சிறப்புப்பெயரால் பாராட்டி**
**12—4—70ல் கூறிய வாழ்த்துப்பா.**

*[நேரிசை வெண்பா]*

சீரார் அழகப்ப வேள்பூந் திருவாளர்
பாரார் பலகலைநூற் பாவாளர்—ஏரார்
பொருளண்ணல் போன்றிப் புவியின்கண் வாழ்க
அருளண்ணல் பொற்பேர் அணிந்து. (41)

——

*மதுரை சௌராஷ்ட்ரா கல்லூரி விரிவுரையாளர் உயர்திரு*

## சொ. சொ. மீ. சுந்தரம் M. Com. அவர்கள்

**பேரிற் கூறிய வாழ்த்துப்பா,**

*[நேரிசை வெண்பா]*

பொன்னு ரமுதகலை பொங்குதமிழ் மன்றமெலாம்
தன்நேரில் சொற்பொழிவு தந்தருளும்—நன்னேயச்
செந்தமிழ்வேள் சொ. சொ. மீ. சுந்தரனுர் செல்வமுடன்
சந்ததமும் வாழ்க தழைத்து. (42)

——

மேலைச்சிவபுரிச் சன்மார்க்க சபையைச் சார்ந்த
கணேசர் செந்தமிழ்க் கல்லூரி (புதிய) முதல்வரும்
புலவரும் ஆகிய

## உயர்திரு சி. செல்வத்தாண்டவனர்

### அவர்கள் பேரிற் கூறிய வாழ்த்துப்பா.

*[நேரிசை வெண்பா]*

சொற்செல்வத் தாண்டவனர் சோபனமாய் வாழியவே
பொற்செல்வம் பெற்றிப் புவியின்கண்—நற்சடைவெண்
பூமலராள் தேமதுரக் கோமளசெந் தாமரைவாழ்
மாமலராள் நோக்கால் மகிழ்ந்து. (43)

——

*மேலைச்சிவபுரிக் கணேசர் செந்தமிழ்க் கல்லூரி விரிவுரையாளர்*
*வித்துவான் பண்டித உயர்திரு*

## மு. இராமலிங்கனர் B. A. அவர்களை

''சொல் அண்ணல்'' என்ற சிறப்புப் பெயரால்
பாராட்டிக் கூறிய வாழ்த்துப்பா. (12—4—70)

*[நேரிசை வெண்பா]*

திருவாளர் ஆய்வுச் சிறப்பாளர் அன்பின்
உருவாளர் நேர்மை ஒருமைப்—பெருவாழ்வு
நல்லெண்ணம் பண்பினிமை நண்ணும் இராமலிங்கச்
சொல்லண்ணல் வாழ்கவளன் சூழ்ந்து. (44)

——

மேலைச்சிவபுரிக் கணேசர் செந்தமிழ்க்கல்லூரி விரிவுரையாளர்

## வித்துவான் இர. சோமசுந்தரனுர் அவர்கள்

**பேரிற் கூறிய வாழ்த்துப்பா.**

*[நேரிசை வெண்பா]*

சொற்பாகோ தேனே சுவையமுதோ என்றுகலை
கற்பார் கருதுங் கவிவாணர்—பொற்பார்
வியன்சோம சுந்தரவேள் மேதினிக்கண் வாழ்க
பயன்மேவும் ஆக்கம் படைத்து. (45)

——

*மேலைச்சிவபுரிக் கணேசர் செந்தமிழ்க் கல்லூரி விரிவுரையாளர்*

## வித்துவான் மு. கோவிந்தராசனுரவர்கள்

**பேரிற் கூறிய வாழ்த்துப்பா.**

*[நேரிசை வெண்பா]*

பொன்னும் புகழும் புலமைப் பொலிவும் பெற்(று)
உன்னதமாய் வாழ்க உலகின்கண் —சொன்னடையிற்
காந்திநிகர் கோவிந்த ராசக் கலைவாணர்
பூந்தமிழ்க்குத் தொண்டு புரிந்து. (46)

——

45 ஆவது பாடல். 4வது வரி ஆக்கம்-செல்வம்.

மேலைச்சிவபுரிக் கணேசர் செந்தமிழ்க் கல்லூரி மாணவர் விடுதிக் கண்காணிப்பாளர் வித்துவான்

## திரு சங்கரநாராயணனுர் அவர்கள்

பேரிற் கூறிய வாழ்த்துப்பா.

*[நேரிசை வெண்பா]*

கங்கை அணியுங் கடவுட் டிருவருளால்
துங்கத் தமிழ்ப்புலமை சொல்லினிமை—பொங்கியொளிர்
சங்கரநா ராயணவேள் தாரணியில் நீடூழி
மங்கலமாய் வாழ்க மகிழ்ந்து. (47)

——

## கொப்பனுபட்டிக் கலைமகள் கல்லூரித் தலைவர்
## உயர்திரு தியாகராசன் அவர்களை "தமிழ்மணி"

என்றசிறப்புப் பெயரால் பாராட்டிக்கூறிய வாழ்த்துப்பா.

*[நேரிசை வெண்பா]*

புகழும் பெண் கல்லூரிக் காப்புரிமை பூண்டு
திகழுந் தியாகேசச் செல்வர்— மகிழும்
குமிழணி முந்நீர்சூழ்க் குவலயத்தில் வாழ்க
தமிழ்மணிப்பேர் சூடித் தழைத்து. (48)

---

48 ஆவது பாடல் : 3 ஆவது வரி : குமிழ்–நீர்க்குமிழி. அணி–அழகிய முந்நீர் - கடல்

*திருச்சி காவேரிப் பண்ணை என்ற பதிப்பகத்தின் உரிமையாளரும் இந்நூலாசிரியரால் இயற்றப்பெற்ற ''உலகியல் நூலறிவுப் பாடல்கள்'' என்ற நூலைப் பதிப்பித்து வெளியிட்டவரும் ஆகிய மேலைச்சிவபுரி உயர்திரு*

## சித. இராமலிங்கனார் அவர்களைத்

*''தமிழண்ணல்'' என்ற சிறப்புப் பெயரால் பாராட்டிக்கூறிய வாழ்த்துப்பா (17–4–70)*

*[நேரிசை வெண்பா]*

சீராளர் செல்வச் சிறப்பார் இராமலிங்கப்
பேராளர் அன்பின் பிணைப்பாளர்—ஏரார்
அமிழ்துண்ணும் விண்ணவர்போல் அம்புவிக்கண் வாழ்க
தமிழண்ணல் பொற்பேர் தரித்து. (49)

——

**மேலைச்சிவபுரித் தமிழறிஞரும் பழம் பெரும் புலவருமாகிய**

## உயர்திரு சொ. பழனியப்பா அவர்களை

**இசை அண்ணல் என்ற சிறப்புப் பெயரால் பாராட்டிக் கூறிய வாழ்த்துப்பா 19—6—70**

*[நேரிசை வெண்பா]*

பூமகனார் செல்வப் புகழ்மகனார் பொங்கு தமிழ்ப்
பாமகனார் வாழியவே பல்லாண்டு—கோமகன் சீர்
மன்னும் பழனியப்ப வள்ளல் இசைஅண்ணல்
என்னும்பேர் தாங்கி இனிது. (50)

——

மேலைச்சிவபுரிப் பழந்தமிழ்க் கவிஞர்

## உயர்திரு வெங்கட்ராமையரவர்களை

"வண்ணத்தமிழண்ணல்" என்ற சிறப்புப் பெயரால் பாராட்டிக் கூறிய வாழ்த்துப்பா. (22—4—70)

*[நேரிசை வெண்பா]*

சொல்வளனுர் வேங்கடஇ ராமரெனுந் தூயபெயர்
கல்விவளன் கொண்ட. கவிவாணர்—செல்வமொடு
தன்னிகரில் வண்ணத் தமிழண்ணல் பேர்சூடி
இந்நிலத்தில் வாழ்க இனிது. (51)

——

வலையபட்டிச் செந்தமிழ்ச் செல்வரும் புலவர்களை ஆதரித்து ஊக்கும் புரவலரும் ஆகிய உயர்திரு

## ந. ராம. மு. இராமசாமிச் செட்டியாரவர்களை

*"செம்மல்" என்னும் சிறப்புப்பெயரால் பாராட்டிக்கூறிய வாழ்த்துப்பாக்கள். (2—7—70)*

*[நேரிசை வெண்பா]*

1 புகழுந் திரு. இராம சாமியெனும் பொற்பேர்
திகழும் பெருங்கருணைச்செல்வர்—மகிழுந்தம்
அன்புமனை மக்களுடன் வாழியவே ஆக்கமெனும்
பொன்பொருள்சீர் பெற்றுப் பொலிந்து. (52)

2 பொலிந்தொளிரும் நண்பாளர்பொங்கு பொறை அன்பு
மலிந்தொளிரும்பண்பாளர்வண்ணம்கலந்தொளிரும்
செய்ய தமிழார்வச் செம்மலெனும் பேர்தாங்கி
வையமிசை வாழ்க மகிழ்ந்து. (53)

——

*சைவசித்தாந்தச் செல்வரும் தமிழ்க் கலைஞருமாகிய*
*வேகுப்பட்டி உயர்திரு*

## மு. சித. முத்தையா அவர்களைச்

**"சிவமணி" என்ற சிறப்புப்பெயரால் பாராட்டிக் கூறிய**
**வாழ்த்துப்பா.**

*[நேரிசை வெண்பா]*

சொல்லினிமைச் செல்வர் துதிசைவ சித்தாந்த
வல்ல மரபொழுகும் மாண்புடையார்—நல்ல
தவமணியாம் முத்தைய சற்குணவேள் வாழ்க
சிவமணிப்பேர் பெற்றுச் சிறந்து. (54)

——

*பொன்புதுப்பட்டிச் செந்தமிழ் அன்பரும்*
*தமிழ்க் கலைஞருமாகிய உயர்திரு*

## குழ. இராமசாமிச் செட்டியாரவர்கள்

**பேரிற் கூறிய வாழ்த்துப்பா.**

*[நேரிசை வெண்பா]*

புயல்தவழும் மாடமலி பொன்புதுவை வாசர்
இயலிசைப்பொன் பைந்தமிழ்நூல் இன்ப—
நயஞ்சுவைக்கும்
சீராளர் செல்வத் திரு. இராம சாமியெனும்
பேராளர் வாழ்கவளம் பெற்று. (55)

——

54 ஆவது பாடல்: 1 ஆவது வரி: பொன்புதுவை-பொன்புதுப்பட்டி.

பொன்புதுப்பட்டி இராமகாதைச் சொற்பொழிவாளர் உயர்திரு

## சே. அ. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்களைப்

**''பூ அண்ணல்'' என்ற சிறப்புப்பெயரால் பாராட்டிக்கூறிய வாழ்த்துப்பா.**

*[நேரிசை வெண்பா]*

சீரார் இராமகதை செப்புதமிழ்ச் சொற்பொழிவிற்
பேரார்ந் திலங்கும் பெருமையுளார்—நேரார்வம்
புக்கேய்ந்த சொக்கேசர் பூஅண்ணல் பேர்சூடித்
தக்கோராய் வாழ்க தழைத்து. (56)

——

## கொப்பனுபட்டி நா. சா. சாத்தப்பனுரின்

**செயல்களைச் சிறப்பித்துப் பாடியது.**

குறிப்பு: *[இந்நூலாசிரியர் சிறுவயதில் (14 வயதில்) தம் நேசராயிருந்த 12வயதுடைய கொப்பனுபட்டி சாத்தப்பர்மீது விளையாட்டாகப் பாடிய பாடல்]*

*[நேரிசை வெண்பா]*

பித்தடியிற் றேர்ந்தவொரு பிள்ளையவன் சாத்தப்பன்
புத்திமிகக் கூர்மையுளான் பூந்தமிழில்—மெத்தஉயர்
பக்தியுளான் செய்யுள்கள் பாடுவதில் ஆர்வமுளான்
உத்தமன் வாழ்க உயர்ந்து. (57)

——

*சைவ சித்தாந்தப் பெருந்தகை வேந்தன்பட்டி உயர்திரு*

## சாத்தப்பசெட்டியாரவர்கள்

**பேரிற் கூறிய வாழ்த்துப்பா. (5—11—71)**

*[நேரிசை வெண்பா]*

திருவளருந் தெய்வஅருள் சேர்ந்தோங்குஞ் செல்வப்
பெருவளங்கள் மேவிவரப்பெற்றோர்—உருவளரும்
மெய்யன்பர் சாத்தப்ப வேளினிது வாழியவே
வையமிசை நீடு மகிழ்ந்து. (58)

——

**வேகுப்பட்டி முந்நாள் ஊராட்சிமன்றத் தலைவர்**

## உயர்திரு, ராம. வள்ளியப்பசெட்டியார்

**அவர்களைப் பாராட்டிக்கூறிய வாழ்த்துப்பாக்கள். (5-8-70)**

*[நேரிசை வெண்பா]*

(1) பூமலரும் வேலூர்ப் புகழ்மலரும் பொற்புறுசீர்
மாமலரும் வள்ளியப்ப மன்னுதின்—கோமலரும்
செவ்விகமழ் சீர்மைச் செயலினையாம் போற்றுமால்
இவ்வினிய வாழ்த்தால் இசைத்து. (59)

(2) ஊராட்சி மன்றத்(து) உயர்நிலைபெற் றைந்தாண்டு
பேராட்சி செய்த பெருந்தலைவ — சீராட்சிக்
காலத்தில் இவ்வூரைக் காசினிக்கண் ணாக்கியநின்
சீலச் சிறப்பே சிறப்பு. (60)

(3) நீர்நிறையும் மேல்நிலையம் ஆக்கியே நீங்காநீர்க்
கூர்நிறைகொள் கூவற் குழாயமைத்தாய் கார்கொள்
இருள்நீக்கும் மின்விளக்கம் எண்டிசையும் நாட்டி
மருள்நீக்கஞ் செய்தாய் மகிழ்ந்து. (61)

(4) இவ்வூர்க்கு நீசெய்வான் ஏற்றபெருந்
தொண்டையெலாம்
செவ்வனவே செய்துயர்ந்த சீராளா—கவ்வையிலா
நல்வளன்கள் பெற்றுநீ நாட்டின்கண் வாழியவே
செல்வமுடன் என்றுஞ் சிறந்து. (62)

——

வலம்புரி பழநியப்பா கல்லூரித் தலைவரும் இந்தியக்
குடியரசுத் தலைவரவர்களின் பரிசு பெற்றவரும்
புலவரும் ஆகிய உயர்திரு

## ஆ. பழ. பாலசுப்பிரமணிய பிள்ளை அவர்களைக் "கலைஅண்ணல்" என்ற சிறப்புப்பெயரால் பாராட்டிக் கூறிய வாழ்த்துப்பாக்கள்.

*[நேரிசை வெண்பா]*

(1) பூபாலர் போற்றிப் புகழ்ந்தேத்தும் பொற்பமைந்த
மாபால சுப்ர மணியனுர்—கோபாலர்
கல்விநலன் பேணுங் கலைஅண்ணல் பேர்தாங்கிச்
செல்வமுடன் வாழ்க சிறந்து. (63)

(2) இந்தியநந் தேச இறைமைக் குடியரசுத்
தந்தை யெனுந் தலைவர் தந்தபெருஞ்—சிந்தைமகிழ்
பொற்பரிசு கொண்டோர் பொருட்குறனூற்
போதனையால்
நற்பரிசு தந்தோர் நமக்கு. (64)

——

63 ஆவது பாடல்: 1 ஆவது வரி: பூபாலர்–அரசர்
2 ஆவது வரி: கோபாலர்–கண்போன்ற குழந்தைகள்

பொன்னமராவதி பதிவுத்துறை உதவிப்பதிவாளர் உயர்திரு

## R. K. பால் அவர்களை அன்பண்ணல்

## என்று பாராட்டிக் கூறிய வாழ்த்துப்பா.

*[நேரிசை வெண்பா]*

சீராளர் நேர்மைச் செயலாளர் செய்யதமிழ்ப்
பாராள்வோர் பாராட்டும் பண்பாளர்—பேரார்வ
அன்பண்ணல் பால்தம் அரியமனை மக்களுடன்
மன்புவிக்கண் வாழ்க மகிழ்ந்து. (65)

——

*பொன்னமராவதி அரசினர் மாணவர் விடுதிக்*
*கண்காணிப்பாளரும் கவிஞர் மணி என்ற புனைபெயர்*
*தாங்கியவரும் ஆகிய நாமக்கல்*

## நா. ஆ. சுப்பிரமணியனார் அவர்களைக்

*'கவிஅண்ணல்' என்று பாராட்டிக் கூறிய வாழ்த்துப்பா.*
*(6—4—70)*

*[நேரிசை வெண்பா]*

பொன்னுருவும் பூமுகமும் பொங்குமெழிற் புன்னகையும்
மன்னியொளிர் மாணவ நன் மக்களுக்(கு)—அன்னை
அணியன்ன தொண்டாற்றும் ஆன்றகவி அண்ணல்
மணியன்பர் வாழ்க மகிழ்ந்து. (66)

——

*பொன்னமராவதி அரசினர் மருத்துவத் துறைத் தலைவர்*

## உயர்திரு டாக்டர் S. இராமகிருஷ்ணன் M. B. B. S

*அவர்கள் பேரிற்கூறிய வாழ்த்துப்பா.* (20—4—70)

*[நேரிசை வெண்பா]*

சீரார் மருத்துவவான் செம்மல் சிறப்பிணைந்த
ஏரார் இராம கிருட்டினப்பொற்—பேராளர்
மன்னுமனை மக்களுடன் வாழ்க மருத்துவத்தில்
உன்னதம்பெற் றென்றும் உயர்ந்து. (67)

——

## மேலைச்சிவபுரிச் சன்மார்க்கசபை வாழ்த்து.

*இந்நூலாசிரியரால் இயற்றி அச்சிடப்பெற்று வெளிவந்துள்ள பூம்புகார் ஆற்றுப்படைநூல் வெளியீட்டு விழாவின்போது*

**சன்மார்க்க சபையின்பேரிற் கூறிய உவகை வாழ்த்துப்பாக்கள்.**

*[நேரிசை வெண்பா]*

1 சீர்பூத்த மேலைச் சிவபுரியிற் செந்தமிழ்ப்பாத்
தார்பூத்த சால்புபெறுஞ் சன்மார்க்கப்—பேர்பூத்த
மாசபையிம் மாநிலத்தில் வாழியவே மாமகளின்
நேசமணம் பெற்று நிறைந்து. (68)

——

68 ஆவது பாடல்: 2 ஆவது வரி: சால்பு - மேன்மை
,, 3 ஆவது வரி: மாமகள் – இலக்குமி

*(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)*

2 பொன்மார்க்கம் பொருண்மார்க்கம் புகழ்மார்க்கம்
ஆதியன பொதிந்து புல்லோர்
துன்மார்க்கத் தொடர்பகற்றிச் சைவமொடு
தமிழ்ப்பேணுந் தொன்மை தோய்ந்த
நன்மார்க்கந் தனைப்பரப்புந் திருமேலைச்
சிவபுரிநன் நகரின் ஆன்ற
சன்மார்க்க சபைநீடு வாழியரோ
தரணிமிசை தழைத்து நன்றே. (69)

*[வண்ணக் கலிவிருத்தம்]*

3 மன்னுந்தமிழ் மேலைச்சிவ புரிநன்னெறி மன்றம்
பொன்னும் மிகுபொருளும்நனி பொலிபூவளனெய்தி
உன்னும்பல புலவோர்தமை உலகுக்கினிதுதவி
மின்னும்புக ழொடுவாழிய சுபமங்கல மிகவே. (70)

---

69 ஆவது பாடல்: 2 ஆவது வரி: புல்லோர் – அற்பர்

*மேலைச்சிவபுரிச் சன்மார்க்கசபையின்*

## அறுபதாம்ஆண்டுநிறைவு வைரமணிவிழாவைச்

**சிறப்பித்துப்பாடிய வாழ்த்துப்பாடல்கள்.**

*[நேரிசை வெண்பா]*

1 சீர்மணக்கும் மேலைச் சிவபுரிக்கண் செல்வஇயற்
பேர்மணக்குஞ் சன்மார்க்கப் பேரவைபூந்–தார்வைர
முப்பா னிரட்டுமணி மொய்க்கும் முடிசூடி
இப்பார்மேல் வாழ்க இனிது. (71)

*[அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்]*

2 ஒருமிப்பா லுயர்ந்தோங்குந் தமிழ்நாட்டின்
மாநிலப்பே ரொளியாய்வந்த
குருமுப்பால் வள்ளுவரின் குறள்வழிநின்
 றொழுகி வளன்கொழிக்கும் நேர்மை
தருமிப்பார் புகழ்மேலைச் சிவபுரியின்
சன்மார்க்க சபை நீடூழி
இருமுப்பான் ஆண்டுவிழா இனிதெய்தி
வாழியசீர் இயைந்து நன்றே. (72)

*[இருபானெண்சீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்[*

3 செழுமைகொள் மேலைச் சிவபுரி யென்னுந்
திருநகர்த் தலத்தினிற் சிறந்த
செய்யசன் மார்க்க சபையினை நிறுவித்
தெளிவுறுந் தீந்தமிழ்ப் புலவர்
தேர்வினுக் குரிய கலைகளை ஆன்ற
செந்தமிழ்ச் செயுளியன் மரபைத்
தெரிவுறப் பயிற்றும் அரியகல் லூரி
சேர்தர அமைத்தநற் செல்வர்

71 ஆவது பாடல்: மூன்ருவது வரி: முப்பானிரட்டு-(இரண்டுமுப்பது)அறுபது

எழுமையுந் தொடரும் முழுமுதற் கடவுள்
இணையடி பரவுநன் நெறியர்
எய்ப்பிலாப் பழநி யப்பராம் அவர்தம்
இளவலண் ணமலை யெனும்வேள்
இன்னவர் தமக்கும் அவர்கள்தம் மக்கள்
பெயரர்கள் இனத்தினர் தமக்கும்
இலங்குகல் லூரிக் கட்டிடங் காண்டற்(கு)
இருநிதி உதவியோர் தமக்கும்

விழுமிய புகழ்சே ரிருமொழிப் புலமை
மிகுகதி ரேசனர் தமக்கும்
மேதகு கலைக்கல் லூரியின்பெருமை
மிக்கமா ணிக்கனர் தமக்கும்
மிளிருமிவ் வ்வையோர் மணிவிழாத்தலைவர்
விரிவுரைக் கலைஞர்கள் தமக்கும்
மேவுமா ணவர்கள் தங்குதற் கேற்ற
விருப்பமைந் தொளிருநல் விடுதி

வழுவிலா முறையில் தோற்றுவித் தளித்த
வள்ளல்நா கப்பனர் தமக்கும்
மருவுமிச் சபையின் செயற்குழுத்தலைவர்
மாண்புறு சிதம்பரர் தமக்கும்
மாணவ மணிகள் முதல்வரா சிரியர்
மற்றுள உறுப்பினர் தமக்கும்
மனங்கனிந் தெனது வந்தனைபுரிந்திவ்
வாழ்த்தினை வழங்குதும் மகிழ்ந்தே. (73)

——

# தேவகோட்டைச் சேவுகன் அண்ணமலை

*கலைக் கல்லூரியைச் சிறப்பித்துப் பாடிய*

## வாழ்த்துப்பா.

*[பன்னிருசீர் (இரட்டை) ஆசிரிய விருத்தம்.]*

சொல்லினிமை மிக்கவுயர் நந்தமிழ் மொழியினிசை
தொல்புவியெ லாம்முழங்கத்
தொன்மையுறு சித்தாந்த சைவநெறி வளர்தரத்
தூயசன் மார்க்கநீர்மை

எல்லையில் ஆர்வமொடு மன்பதைகள் பயில்வுற
ஏற்றமுறு கொடைகளாதி
இனையபல அரியபெரு நினைவுபுரி தருமங்கள்
எங்கணும் இனிதியற்றி

மல்லலுறு பொன்மகள் சிவகாமி மனைவிநன்
மக்கள்புடை சூழவாழும்
மாபெரும் மாண்புடைய மகிபரண்ணமலை
வள்ளலார் தோற்றுவித்த

செல்லமிகு கல்வியொடு பல்வகைய நல்வினைவு
சேர்தருந் தேவகோட்டைச்
சேவுகன் அண்ணமலைகலைக் கல்லூரி
செகமோங்கி வாழ்க! நன்றே. (74)

———

74 வதுபாடல்: 13வது வரி: செல்லமிகு-செல்வம் மிகுந்த.

## மதுரை நகரத்தார் சங்கத்தின் 15 ஆவது ஆண்டுவிழா (24-2-72)

*நிகழ்ச்சியின்கண் அச்சங்கத்தைச் சிறப்பித்துப்பாடிய வாழ்த்துப்பாடல்கள்.*

*[நேரிசை வெண்பா]*

(1) பூவளனும் பாவளனுங் கோவளனும் பொங்கும் பொன்
மாவளனும் பெற்ஞேங்கி வாழியவே!—மேவும்
நலமார் மதுரை நகரத்தார் சங்கம்
நிலமீது நீடு நிறைந்து. (75)

*[கட்டளைக் கலித்துறை]*

(2) பகரத்தான் ஈறிற் பெருமைசே ரின்பப் பலகலைகள்
நுகரத்தேன் என்னச் சுவைதரு பைந்தமிழ் நுண்புவிக்கண்
சிகரத்தார் தீப மெனத்திகழ்ந் தோங்குந் திருமதுரை
நகரத்தார் சங்கம் புகழுடன் வாழ்க! நனிசிறந்தே. (76)

*[நேரிசை வெண்பா]*

(3) அன்பும் நெகிழ்வும் அமைந்தினிது வாழியவே
தென்புறு நற் பண்புமிகுந் தென்மதுரை-இன்புறுசீர்
துங்கம் பெருகிஅருள் சூழும் நகரத்தார்
சங்கம்எஞ் ஞான்றும் தழைத்து. (77)

——

75 வது பாடல்: 1 ஆவது வரி: பாவளன்–தூய்மைச் செல்வம்.
77 ஆவது பாடல் 3 ஆவதுவரி: துங்கம்-பெருமை.

மதுரை நகரத்தார் சங்கத்தின் 15ஆவது ஆண்டுவிழா நிகழ்ச்சியின்கண் சிறப்பு விருந்ினராக வருகை தந்திருந்த பிரபல தொழில் அதிபர்

## உயர்திரு, மு. சித. முத்தையாசெட்டியாரவர்கள்

**பேரிற்பாடிய வாழ்த்துப்பா.**

*[நேரிசை வெண்பா]*

சொல்லினிமை தோய்ந்த சுபசோ பனமுடையார்
வல்ல வணிகஇயல் மாண்புடையார்—செல்வநலன்
மிக்கஒளிர் முத்தைய வேளினிது வாழியவே!
தக்கபுகழ் தாங்கித் தழைத்து. (78)

——

கலைத்தந்தை
உயர்திரு கருமுத்துத் தியாகராசச்
செட்டியாரவர்கள் புதல்வர்

## திருமிகு சுந்தரஞ் செட்டியாரவர்கள்

*பேரில் கூறிய வாழ்த்துப் பாடல்கள். (10-2-72)*

*[கலிநிலைத்துறை.]*

1 பொன்னம் பூமகள் புரிதரும் அருளொடும் புவனம்
மின்னும் வான்புகழ்வேந்தரின் அணியிடை
விளங்கும்
துன்னும் மாதன வணிகரின் மரபினத் தோன்றல்
மன்னுஞ் சுந்தரர் வளனொடும் வாழிய! மகிழ்ந்தே.
(79)

79 ஆவதுபாடல்: 1ஆவதுவரி:- பொன்னம் பூமகள்- பொன்வடிவமான அழகிய இலக்குமி

*[கட்டளைக் கலித்துறை]*

2 மண்ணவர் பாசமும் மன்னவர் நேசமும்
மாமறை நூற்
பண்ணவர் ஆசியும் பாவலர் சோபனப்
பாவொலியும்
விண்ணவர் வாழ்த்தும் விரவப்பெற் றோங்கி
மிளிர்தருமெங்
கண்ணவர் சுந்தரர் வாழிய சீர்மை
கமழ்ந்தினிதே. (80)

*[நேரிசை வெண்பா]*

3 ஐந்தருநேர் வள்ளலின் அண்ணல் தியாகேசர்
மைந்தராம் சுந்தரனார் வாழியவே!— சந்ததமும்
திக்குளெழில் புக்குபுகழ் மிக்கவளன் தக்கமனை
மக்களுடன் கூடி மகிழ்ந்து! (81)

——

81 ஆவது பாடல்: 1 ஆவது வரி: ஐந்தரு-பொன்னுலகத்திலுள்ள, சந்தானம், அரிச்சந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம் என்ற பஞ்சதருக்கள்

பூலாங்குறிச்சி

## வ. செ, சிவலிங்கஞ் செட்டியார் அவர்களின் (28-2-1972) மணிவிழா மலருக்கு வழங்கிய வாழ்த்துப்பாடல்கள்.

*[அறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்]*

1 நீருலவுஞ் சடைமுடியான் திருவருளாற்
பலவளன்கள் நிறையும் நேர்மைப்
பேருலவும் எழிற்பூலாங் குறிச்சி யெனும்
பெருநகர்க்கண் பிறங்கும் முல்லைத்
தாருலவும் மணிமகுடத் தனவணிகர்
மரபுதித்த தரும சீலர்
ஏருலவுந் திருமகளின் இசையருளாற்
பெருஞ்செல்வம் இணையப் பெற்றோர். (82)

2 சீரார்பூ லாங்குறிச்சி ஊராட்சி
மன்றத்தும் திருப்புத் தூரின்
ஊராட்சி ஒன்றியத்தும் முதற்றலைவ
ராய்விளங்கி உலகம் போற்றும்
பேரார்வப் பணிபுரிந்து மக்கணலன்
தேசநலன் பெருகி ஓங்க
நேராட்சி செய்துயர்ந்த நியமமுறு
பெருமைதரு நீர்மை யாளர். (83)

---

83 வது பாடல் 7ஆவது வரி- நியமம்--கடமை,

3 தனதனைநேர் தனத்தாளர் தாமரைப்பூ
முகத்தாளர் தரமார் செல்வக்
கனதனப்பொற் கொடை கொடுத்துக் கலைக்கல்விப்
படிப்பகங்கள் காண எண்ணும்
புனிதமனக் கருத்தாளர் புலவோரை
ஆதரித்துப் புரக்கும் பூபர்
துனிதவிர்க்கும் முனிதலிலாக் கனிவுடையார்
இனிமையுறு சொற்பே ராளர். (84)

4 பலகலைகள் பயின்றுணர்ந்த பழம்பெருமைச்
சைவநெறிப் பண்பின் மிக்கார்
உலகியல்நூ லறிவாளர் உவமையிலாப்
பொதுஅறிவில் உயர்பே ராசான்
அலகிலிரும் வணிகஇயல் ஆலைஅமைத்(து)
இயக்குமியல் ஆய்வில் தேர்ந்த
குலமகனர் தலமகனர் நலமருவுந்
தமிழுலகக் குரிசில் ஆவார். (85)

5 இத்தகைய வளனமைந்த இறைப்பெயராம்
சிவலிங்கம் என்ற பேர்கொள்
உத்தமர்நன் மனையுடன்மா மணையமர்ந்து
மக்களுற வுலகோர் சூழ
நத்திருமுப் பானுண்டு நிறைவுமணம்
இனிதிந்நாள் நனிசெய் தாரால்
சித்திதரும் இச்சாந்தி மணமக்கள்
வாழிய!சீர் சிறந்துநன்றே, (86)

---

84 வது பாடல் 1ஆவதுவரி தனதனைநேர்-குபேரனுக்குச்சமமான
,, ,, தனத்தாளர்—செல்வம் உடையவர்

85 ஆவது பாடல் 7ஆவதுவரி:- தலமகனர்-உலகிற் சிறந்தோர்
,, 8ஆவதுவரி:- குரிசில்-தலைவர்

[நேரிசை வெண்பா]

6 வாழ்க! சிவலிங்க வள்ளல் மனைமக்கள்
சூழ்க மகிழ்ந்தவர்பாற் சோபனங்கள்–நீள்புவிக்கண்
நங்கையுமை பங்கிலுறை சங்கரனின் நல்லருளால்
மங்கலங்கள் பொங்கி மகிழ்ந்து. (87)

7 சொல்லாண் டொளிரும்இத் தொல்புவிக்கண் சோதிமதி
எல்லாண் டொளிரும்நாள் எல்லைவரை—பல்லாண்டு
வாழியஇச் சாந்திமண மக்கள் வளங்களெலாஞ்
சூழியல்பு கொண்டு சுகித்து. (88)

——

## மதுரைத் திருவள்ளுவர் கழகத்தின்

*பேரிற்கூறிய வாழ்த்துப்பா.*

[நேரிசை வெண்பா]

சீரார் மதுரைத் திருவள் ளுவர்கழகம்
பேரார்ந்து வாழிய நற்,பெற்றியுடன்—ஏரார்ந்த
பொன்னாட்டின் உம்பரொடு பூவுலகும் போற்றிசெயத்
தென்னாட்டில் ஓங்கிச் சிறந்து. (89)

——

88 ஆவது பாடல் 1 ஆவதுவரி:- சோதி-சூரியன்
,, ,, மதி-சந்திரன்

## திருச்சி சிவாஜி என்ற மாத இதழ் பற்றிக்கூறிய வாழ்த்துப்பா.

*[நேரிசை வெண்பா]*

சொல்லால் பொருளால் சுவையுணர்வால் தூயதமிழ்
வல்லார் புனையும் வரகவியால்—நல்லார்
உளம்பற்றும் மாதஇதழ் ஒண்பேர் சிவாஜி
வளம்பெற்று வாழ்க மகிழ்ந்து. (90)

———

இந்நூலாசிரியரால் இயற்றப்பட்ட

## "பூம்புகார் ஆற்றுப்படை" என்ற இலக்கிய நூலுக்கு திருச்சி வானொலி நிலயத்தார் 7 – 11 – 1970ல் ஒலிபரப்புமூலம் செய்தவிமரிசனம்பற்றிக்கூறிய உவகை வாழ்த்துப்பா.

*[இன்னிசை வெண்பா]*

பூம்புகார் ஆற்றுப் படைநூற் பொருளணிசொல்
தேம்பா விமரிசனஞ் செய்த திருச்சிநகர்
வானொலிக்கென் வாழ்த்தை வனைந்து வழங்குகிறேன்
தேனினிக்கும் பாநீர் தெளித்து. (91)

———

பொன்னமராவதி

## அரசு அலுவலர் மனமகிழ் மன்ற அன்பர்கள்

*பேரிற் கூறிய வாழ்த்துப்பாடல். (30—3—1971)*

*[எழுசீர்க் கழிநெடிலடிஆசிரிய விருத்தம்]*

மனமகிழ் மன்ற உறுப்பினர் தமக்கும்
மன்றதன் தொண்டுகள் தமக்கும்
கனமிகுந் தலைவர் விற்பன ராம
கிருட்டிணக் கலைமணி தமக்கும்
தனமிகும் உதவித் தலைவராம் முத்துச்
சாமிவேள் தமக்கும்நற் செயலர்
மனமகிழ் சீனி வாசனுர் தமக்கும்
வாழ்த்தினை வழங்குதும் மகிழ்ந்தே. (92)

——

வேகுப்பட்டி ஊராட்சி மன்றத் தலைவராகப்

போட்டியின்றித் தேர்ந்தெடுக்கப்பெற்ற

## உயர்திரு A. V. இராமநாதஞ் செட்டியார் M. A.

**அவர்களைப் பாராட்டிக்கூறிய வாழ்த்துப்பாடல்கள்.(5-8-70)**

*[நேரிசை வெண்பா]*

1 திருமகளின் சீரருளும் செய்யகலை வாணி
உருமகளின் பேரருளும் ஓங்கும்-பெருமையுடன்
வாழ்க மணிஇராம நாதநீ வையகக் கண்
சூழ்கவளன் எல்லாம் சுரந்து. (93)

2 சீராட்சி செய்தொளிருஞ் செல்வருறை வேலூரெம்
ஊராட்சி மன்றத்(து) உயர்தலைமைப்-பேராட்சித்
தேர்வுக் கெதிர்ப்பின்றித் தேர்ந்தெடுக்கப்
பெற்றுயர்ந்த
ஆர்வல நீ வாழ்க அமைந்து. (94)

3 மக்கள் சுய ஆட்சி மன்றப் பெருந்தலைமை
மிக்கமகிழ்ந் தேற்றுநம் வேலூரைத்—திக்குளுயர்
உன்னதங்கொள் மாநகரென் றோங்குலகோர்
வாழ்த்துவான்
நன்னலன்கள் செய்வாய் நயந்து. (95)

4 நல்லபுகழ் சேர்இராம நாதநீ நம் ஊர்க்கு
மல்லலுறுந் தொண்டாற்றி வாழியவே—சொல்ல
மனதினிக்குஞ் சுற்றம் மனைமக்கள் சூழக்
கனதனங்கள் பெற்றுக் கனிந்து. (96)

——

## காந்தி அடிகளின் நூற்றுண்டுவிழாச் சிறப்பிதழுக் காகச் சென்னை "நகரத்தார்" என்ற மாத இதழுக்கு "காந்திமகான் எமை ஆளுங்கடவுள்" என்ற தலைப்பில் இயற்றி வழங்கிய பாடல்கள்

*[அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்]*

(1) வேந்தரெலாம் முடியரசை விடுத்தகல
அந்நியர்கள் வெருவி நீங்க
மாந்தரெலாம் அரசுரிமை வளம்பெறவான்
குடியரசு மலரச் செய்தோன்
சாந்தமுறும் பாரதத்தாய் பெற்றெடுத்த
தவப்புதல்வன் தருமதூதன்
காந்திமகான் நூற்றுண்டு நினைவுதருங்
கனகமலர் காண்போம் இன்றே. (97)

(2) அன்புறையும் நெஞ்சகத்தன் ஆன்றபெருஞ்
சற்குணத்தன் அரிகள் தம்மின்
துன்புறையும் மருள்மாற்றித் தொட்டணைக்குங்
கரதலத்தன் துரிசில் லாமெய்
பொன்புரையும் எழில் நிறத்தன் புகலுவபோல்
செயல்வினைகள் புரியுஞ் சித்தன்
இன்புறையும் அருண்முகத்தன் காந்திமகான்
எமைஆளும் இறைவன் தானே. (98)

---

98 ஆவதுபாடல்: 2ஆவதுவரி: அரிகள்- பகைவர் (போருக்கு வருவோர்)

(3) மகரத்தால் அலேமோதும் வாரிதிசூழ்
நிலவுலக வரைப்பின் கண்ணே
பகரத்தான் இறுதியிலாக் காந்திமகான்
பணிபெருமை பரவி வாழ்க
சிகரத்தார் தீபமெனச் செந்தமிழ்நாட்
டிடை மலர்ந்து சிறப்புற் ேறாங்கும்
நகரத்தார் மாதஇதழ் வளம்பெற்று
வாழியஎந் நாளும் நன்றே. (99)

---

## திருப்புத்தூர்த் தமிழ்ச் சங்கத்தாரால் 1-6-1969ல் மதுரையில் நடத்தப்பெற்ற இருபதாம் நூற்றுண்டுத் திருவள்ளுவமாலேக் கவிஅரங்கில் திருவள்ளுவர் குறளும் தண்ணீரும் என்ற பொருள் பற்றிப்பாடிய பாடல்கள்.

*[நேரிசை வெண்பா]*

1 இருபதாம் நூற்றுண்(டு) இயலினிமை தோய்ந்த
திருவள் ளுவமாலேத் தேறல் — பருகிச்
சுவைக்குங் கவிஅரங்கீர் சொல்லுவன்பா இப்பேர்
அவைக்கென் வணக்கம் அளித்து. (100)

---

99 ஆவதுபாடல்: 1 ஆவதுவரி: மகரம்-சுருமீன்

100 ஆவதுபாடல்: 2 ஆவதுவரி: தேறல்-தேன்

2 தண்ணீர்ப் பொருள்பற்றித் தாமத் திருக்குறளின்
பண்ணீர்மை பாடவரும் பாவலன்போல்—எண்ணுமல்
பொங்கும் பசுங்குழவி பூவாய் குளறுவபோல்
இங்கென்பா ஏற்பீர் இயைந்து. (101)

3 மூவேந்தர் வாழ்த்துமுழங்கு தமிழ்க்குறணூல்
பாவேந்தர் வள்ளுவனுர் பாடினுர்—பூவேந்தும்
வானின் றுலகம் வழங்குதலான் அவ்வான்நீர்
தானமிழ்தம் என்ற பொருள் தந்து, (102)

4 மண்ணீர்மை சூழுலக வாழ்வுக் குயிர்த்துணேவான்
தண்ணீ ரெனவுணர்த்திச் சாற்றுசீர்ப்-பண்ணூறும்
செந்நாப்போ தாரளித்த தெய்வத் திருக்குறணூல்
எந்நாளும் வாழ்க இனிது. (103)

5 பாவலர்க்கும் காவலர்க்கும் நாவலர்க்கும்
மேவலர்க்கும்
ஏவலர்க்கும் வாழ்க்கை யியல்காட்டும்— தாவில்சீர்ப்
பூவளர்நீர் ஆற்ரெழுக்குப் போன்றதாம்
போற்றுபெரு
நாவலர்நூல் ஓசை நயம். (104)

6 உள்ளல் உரைத்தல் உரைத்ததனேத் தெள்ளிடலே
வள்ளுவர்க்கு நாம்சூட்டும் மாலேயென—
விள்ளலன்றிப்
பொய்யா மொழிநீர்ப் புலமை சொலவெளிதோ
ஐயாவே வாழியநின் ஆய்வு. (105)

7 உள்ளங்குளிர் தரலால் ஊனழுக்குப் போக்குதலால்
வள்ளல்போல் நன்மை வழங்குதலால்—
தெள்ளுமழைத்
தண்ணீரை ஒக்குமெனச் சாற்றலாம் மக்களிரு
கண்நேர் குறள்நூற் கவி (106)

8 பாபத்தைப் போக்குவதில் பண்பமைப்பை
ஊக்குவதில்
கோபத்தை நீக்கியருள் கூட்டுவதில்—சோபிக்கும்
பூமகள்நேர் பொன்னிப் புனலென்பேன்
வள்ளுவவேட்
கோமகனூர் தந்த குறள். (107)

9 தாகத்தைத் தீர்க்கும் தருமச் சிறப்பளிக்கும்
சோகத்தை நீக்குந் துயர்போக்கும்—யூகத்து
மாதானு பங்கி வழுத்துநூற் கொப்பிடலாம்
கோதா விரிநீர்க் குணம். (108)

10 ஈரா யிரமாண் டினியவிழாக் கண்டோம்பின்
சீராராண் டாண்டுதொறுஞ் செய்யகுறள்–நீரூற்று
நூல்விழா அந்நீர் நுகர்விழா நுண்பொருண்முப்
பால்விழாக் காண்போம் பயின்று. 109

11 இன்பத் தமிழ்த்தொண்டும் எம்மான்குன்
றக்குடிவேள்
அன்பும் அகலா அடிகளார்—பொன்பணிகள்
தாங்குதிருப் புத்தூர்த் தமிழ்ச்சங்கம் வாழியவே
பூங்கமலப் பூவையருள் பூத்து. (110)

——

மதுரைத் தமிழ்நாடு நாளிதழுக்கு
"வளம்பெருகட்டும்" என்ற தலைப்பில்
வழங்கிய குடியரசு நாள்
*வாழ்த்துப்பாடல்கள். (26—1—1968*

*(அறுசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்)*

1 முடியரசர் பாரதத்தின் பகுதிகளிற்
கோலோச்சும் முறைமை பெற்ற
கடியரசர் பொடியரசர் கனஅரசர்
உலகினையே கட்டி ஆளத்
துடியரசர் இவர்களெலாம் நந்தேச
அரசியலின் தொடர்பில் ஒன்றிக்
குடியரசா கியநாளைக் கொண்டாடிப்
போற்றி உளங்கொள்வோம் நன்றே. (111)

2 ஆயிரத்தொள் ளுன்பானூ றைம்பதாம்
ஆண்டினிலே அணையும் மாதம்
பாயிரத்தை நிகர்த்தமுதற் சனவரியாந்
தேதியிரு பானே டாறில்
சேயிரத்த உடலமெலாஞ் சுதந்திரத்தின்
மணம்வீசித் திமிர்ந்து பொங்கத்
தாயிரத்தக் குடரிருந்து பாரதத்தின்
குடியரசு சனித்த தாமால் (112)

---

111 ஆவது பாடல்: 3 ஆவது வரி: கடியரசர் – காவலையுடைய அரசர்
,, ,, பொடியரசர் – தூள்போன்ற சிற்றரசர்

112 ஆவது பாடல்: 6 ஆவது வரி: திமிர்தல் – பூசுதல்
,, 8 ஆவது வரி: சனித்தது – பிறந்தது

3 இந்தியநந் தாய்நாட்டின் இணையிலா
வளன்களெலாம் இனிது வாழ்க
செந்தமிழ்மா மொழிநமது தேசத்தில்
எங்கணுமே சிறந்து வாழ்க
பந்தமுறும் பாரதத்தின் சுதந்திரமுங்
குடியரசுப் பண்பும் வாழ்க
இந்தஉல கியலிடையே எஞ்ஞான்றும்
இன்பநிலை இயைக மாதோ. (113)

——

## மதுரைத் தமிழ்நாடு வார இதழுக்கு

'குடியரசு நாள் வாழ்த்து' என்ற தலைப்பில் வழங்கிய பாடல்கள் (26—1—69)

*(கலிநிலைத்துறை)*

1 வன்மைசால்முடி மன்னர்தம் ஆட்சியில் மலிந்த
புன்மை தீர்த்திடும் புனிதநாள் புவியெலாம் போற்றும்
நன்மை சேர்குடி யரசியல் தோன்றியநாளாம்
மென்மை மேவுமிந் நாளினை வாழ்த்துவம் விழைந்தே. (114)

[ஆறுசீர்க்கழிநெடிலடி ஆசிரிய விருத்தம்]

2 செக்கர்வான் தோன்றும் பிள்ளைச்
சிறுபிறை முடியிற் சூடும்
முக்கணன் பரமன் வேத
முதல்வனின் கருணை யாலே
தக்கபன் னலன்க ளெல்லாந்
தருங்குடி யரசாம் நந்தம்
மக்களின் உரிமை ஆட்சி
வளனொடும் வாழ்க மாதோ. (115)

[நேரிசை வெண்பா]

3 வாழ்கநம் பாரதத்தாய் மக்கள் குடியரசு
வாழ்க சுதந்திரத்தின் மாண்புநெறி – வாழ்கவே
இன்னமுதம் பொங்கிவளர் இந்நாட்டு மக்களெலாம்
உன்னதம்பெற் றோங்கி உயர்ந்து. (116)

——

## இலங்கை வீரகேசரிப் பத்திரிகை அதிபரும் ஆவினிப்பட்டிச் சைவப் பெரியணன் செட்டியார் அவர்களின் குமாரரும் ஆகிய

## உயர்திரு, சுப்பிரமணியன் செட்டியாரவர்கள்,

*பர்மாவுக்கு விஜயஞ் செய்த காலத்து அவர்கட்கு பர்மாமோல் மேன் நாட்டுக்கோட்டைச் செட்டியார் கோயில்களின் தரும பரிபாலன சபையார், மோல்மேனில் 28-1-1956ல் வாசித்துக் கொடுத்த நல்வரவேற்பு வாழ்த்து, உபசாரப் பத்திரம்.*

**[குறிப்பு :- இந்த உபசாரப் பத்திரத்திற்குரிய அடியிற்கண்ட பாடலை இயற்றியவர், அக்காலத்தில் மோல் மேனில் மேற்கண்ட தருமபரிபாலன சபையின் தலைவராயிருந்த இந்நூலாசிரியராவர்.]**

*[நேரிசை ஆசிரியப்பா.]*

1 அன்பின் வழிய துயிர்நிலை அஃதிலார்க்
கென்புதோல் போர்த்த உடம்பென வள்ளுவர்

2 செப்பிய மொழியை ஒப்பிநன் றமருந்
திப்பிய முடைய செல்வர்கண் மருவும்

3 பாவினிற் பொலிதரு பண்டையப் புகழ்சேர்
ஆவினிப் பதியெனும் அழகுறு நகரின்

4 மனமகிழ்ந் தறவழிப் பணிபல புரியும்
கனதன வைசியர் கமழ்தரு மரபிற்

5 சளையாத் தவம்புரி சான்றோர் நிறைதரு
இளையாத் தங்குடி வளர்பிரி வினிலே

6 ஏய்ந்தநங் குலத்தார் இனநலன் கருதி
வேந்தன் சபையில் மிகுதியாய் வேண்டிய

7 தக்கவோர் சிரத்தைத் தருவமென் றுரைத்த
ஒக்கூர் வகையில் உயர்வுடன் தோன்றிய

8 சைவப் பெரியண வள்ளலின் தவத்தில்
தெய்வப் பரமன் சிவபிரான் அருளால்

9 ஒப்பில் சிறப்புடன் இப்புவி யுதித்த
சுப்பிர மணியத் தோன்ருல் வருக

10 புகழ்ச்சியும் இகழ்ச்சியும் புன்சிரிப் புடனே
மகிழ்ச்சியாய் ஏற்கும் மாண்பிேனய் வருக

11 சொற்பெருக் காற்றுந் தூயநற் பணியில்
அற்புதம் பெருக்கிய அண்ணுல் வருக

12 தமிழுஞ் சைவமுந் தரணியிற் பரவிக்
கமழ்தர எழுதுங் கலைஞரே வருக

13 பாரத மிலங்கையிற் பண்புமிக் கோங்கிய
வீரகே சரியெனும் மிகுதிறன் வாய்ந்த

14 செய்தித் தாளின் சேவையா லுலகோர்
உய்வுறச் செய்த உரவோய் வருக

15 சால்வீன் நதிசூழ் தண்மலர்ப் பொழினிறை
மோல்மேன் நகரின் மூதறி வாளர்

16 பாட்டிலும் ஏட்டிலுந் தீட்டிய புகழ்சேர்
நாட்டுக் கோட்டை நகரத்தார்தம்

17 பெருமை மிக்க பெயர்தரு கோயில்
தரும பரிபா லனசபை யாரின்

18 அழைப்பினுக் கியைந்தீங் கன்புடன் வந்தறி
வுழைப்பினை நல்கிய உயர்தனிச் செம்மால்

19 நின்வர வால்யாம் நீடிய இன்பமும்
உன்னிய பெரும்பே ருவகையு முற்றேும்

20 நின்உடல் நலனும் நீண்டவாழ் நாளும்
மன்னிய பற்பல வளன்களும் பெற்றே

21 வாழிநீ யிந்த மாநிலம்
ஊழி தோறும் உவப்புடன் உயர்ந்தே. (117)

——

## பசும்பொன் உ. முத்துராமலிங்கத் தேவரவர்கள்

*பர்மாவைச் சேர்ந்த மோல்மேன் நகருக்கு வருகை புரிந்த 1-1-1956ல் மோல்மேன் தமிழ் மக்கள் அவரை வரவேற்று வாசித்துக் கொடுத்த வாழ்த்து இதழ்.*

[குறிப்பு :- **இவ் வரவேற்பிதழுக்குரிய அடியிற்கண்ட பாடல்களை இயற்றியவரும், தமிழ் மக்கள் சார்பாக வாசித்து முத்துராமலிங்கத் தேவரவர்கட்கு வழங்கியவரும் இந்நூலாசிரியராவர்.**]

*[நேரிசை வெண்பா]*

1 சொல்வளனுர் மாமுத்து ராமலிங்கத்
தோன்ருல்நின்
நல்வரவாற் பேருவகை நண்ணினேம் —
பல்வகைப்பொற்
சீர்வளரும் பர்மியஇத் தேசமதில் நின்அன்பை
ஆர்வமுடன் நெஞ்சத் தணிந்து. (118)

2 பூமாலை சூட்டிப் புனைந்தோம் அதுவன்றிப்
பாமாலையுஞ் சூட்டிப் பார்க்கின்ரேம் — தேமார்
இமிழ்திரைசூழ் சால்வீன் எழில்நகராம்
மோல்மேன்
தமிழ்மக்கள் அன்புடனே தான். (119)

3 பொன்முத்து வானம் பொழிபூந் தமிழ்நாட்டின்
நன்முத்து ராமலிங்க நாவலனே – சொன்முத்து
மாரிபொழிந் தெம்மனோர் மாண்புறுவான்
வந்தஅருள்
வாரிநீ வாழ்க மகிழ்ந்து. (120)

*[பன்னிருசீரடி ஆசிரிய விருத்தம்.]*

4 மேலாந் தமிழிற் றனிநடையில்
மெய்யின் பொருளை உலகமெலாம்
வியக்கும் படிசொற் பெருக்காற்றும்
விறலோய் வருக நீதிநெறி

நூலாம் புனித மனுதரும
நுட்பம் அனைத்தும் பயின்றுணர்ந்தே
நுவல்வோய் வருக பாரதத்தாய்
நோற்ற தவத்தில் உதித்தகுண

சீலா வருக தேவர்குலச்
செல்வா வருக தலமுழுதுந்
திசைகள் தோறும் புகழ்கொழிக்குந்
தெய்வப் புலமைத் தமிழ்த்தாயின்

---

119 ஆவது பாடல் : 2 ஆவது வரி : தேம் – இனிமை, மணம்.

பாலா வருக மோல்மேன் நற்
பதியிற் றமிழ்மா மக்களிடை
பசும்பொன் முத்து ராமலிங்கப்
பண்பின் மிக்கோய் வருகவே. (121)

[குறள் வெண்பா.]

5 வாழியவே உமுத்து ராமலிங்க மாண்பினன்பூ
ஊழிதொறும் மேவி உயர்ந்து. (122)

—7—

## மேலைச்சிவபுரி வ. பழ. சா. பழ. சித. இராமலிங்கஞ் செட்டியாரவர்கள்

*புதல்வி திருவளர் செல்வி மணிமேகலை என்ற சேதுக்கரசிக்கும், பொன்புதுப்பட்டி ஆறு. வீர காசிவிஸ்வநாதன் செட்டியாரவர்கள் புதல்வன் திருவளர் செல்வன் சிதம்பரம் B. Sc., க்கும் மேலைச்சிவபுரியில் 23-8-1971ல் நடந்த திருமணத்தின் போது வாசித்து வழங்கிய மணமன்றல்*

**வாழ்த்துப் பாடல்கள்.**

[நேரிசை வெண்பா]

1 சீர்பெருகி வாழியநற் செல்வன் சிதம்பரவேள்
பார்பெருகும் ஆக்கம் படைத்தோங்கி —
ஏர்பெருகுஞ்
செங்கமலப் பூவதனச் சேதுக் கரசிக்கு
மங்கலநாண் பூட்டி மகிழ்ந்து. (123)

---

123 ஆவது பாடல் : இரண்டாவது வரி : ஆக்கம் – செல்வம்.

*[கட்டளைக் கலித்துறை.]*

2 மணிமே கலையெனுஞ் சேதுக் கரசி
மண மகளுக்(கு)
அணிவே ணிகர்க்கும் அருமை மணமகன்
ஆய்தரு சற்
குணவான் சிதம்பரம் தும்பிகள் ஊதிக்
குழைதரு தேன்
மணமாலை சூட்டி உமைசிவன் போல்நீடு
வாழியவே. (124)

*[ஆறுசீரடி ஆசிரிய விருத்தம்]*

3 தருவளரும் எழின்மேலைச் சிவபுரிச்சன்
மார்க்க சபைத் தலைவ ரான
திருவளருஞ் சிதம்பரனுர் சுதன்இராம
லிங்கமெனுஞ் செம்மல்பெற்ற
உருவளரும் மகள்சேதுக் கரசியைப்பொன்
புதுவைநகர் உறவோனுன
பெருமகன்பொன் சிதம்பரம்நன் மணம்புரிந்து
வாழ்கவளன் பெருகிநன்றே (125)

*[ஆறுசீரடி ஆசிரிய விருத்தம்.]*

4 வர்க்கமெலாம் வாழ்த்திசைப்ப மன்றல்புரிந்
தொளிருமண மக்காணீவீர்
தக்கபெருஞ் செல்வமொடு தாரணியின்
நலன்களெலாந் தரப்பெற் ரேங்கிப்

புக்களையும் நுகரடிசில் பூமலர்க்கைப்
பொன்மழலைப் பொலிவு கூர்நன்
மக்களையும் ஈன்றெடுத்து மங்கலமாய்
நீடுழி வாழ்வீர் மன்னோ. (126)

*[எழுசீரடி ஆசிரிய விருத்தம்.]*

5 அருணிறை பெருகுஞ் சத்தியுஞ் சிவமும்
அன்பகம் ஒன்றின லன்றி
இருநில மியங்கா தெனுமியல் தெரிவீர்
எழிலிளம் பருவதம் பதியீர்
மருவுகஸ் தூரி காந்தியைப் போலும்
வாசுகி வள்ளுவர் போலும்
உருவளங் கனிநும் இயல்பிணைந் தொன்றி
உவகைவாழ்(வு) எய்துவீர் உயர்ந்தே. (127)

*[நேரிசை வெண்பா]*

6 சேதுக் கரசி சிதம்பரந் தம்பதியர்
மாதுரியப் பூவின்கண் வாழியவே - வேதமுதல்
ஏறு விடையூரும் எம்மான் திருவருளால்
பேறு பதினாறும் பெற்று. (128)

——

## இந்தியாவுக்கும் பாக்கிஸ்தானுக்கும் 1965 ஆம் ஆண்டில் போர் நடந்த காலத்தில்

## "வாழ்க பாரதம்" என்ற தலைப்பில்

**மதுரைத் தமிழ்நாடு நாளிதழ் 17—10—1965 ஞாயிறு மலருக்கு வழங்கிய பாடல்.**

*[கண்ணிகள்]*

1 பார தத்தின் தீர மிக்க
வீரர் கொண்ட (இ) ராணுவம்
பகைவர் தம்மைத் திணரவைத்து
வீழ்த்து மவர்தம் ஆணவம்

2 விண்ணி லும்இம் மண்ணிலும்நம்
வீரர் செய்த சாதனை
மேலை நாட்டு மக்களும்வி
ரும்பி ஏற்கும் போதனை

3 உயர்வு கொண்ட பார தத்தின்
ஒருமைப் பண்பு காட்டுவோம்
உலகில் நமது வலிமைஅயூப்
உணருந் தன்மை ஊட்டுவோம்

4 ஆசியாநோ யாளிகாற்று
வீசிநம்மேற் படுவதா
அறுவை செய்து தீர்த்திடாமல்
அருகிற் ருேன்ற விடுவதா

5 கத்திகொண்டு கருவிகொண்டு
கடமைசெய்ய நோக்குவோம்
புத்திகெட்ட சீனர் தம்மின்
பித்தநோயைத் தாக்குவோம்

6 ஊரினில்வந் தூறுசெய்யும்
ஒற்றரை நசுக்குவோம்
போரினை விரும்புமாயப்
புல்லரைப் பொசுக்குவோம்

7 வம்புசெய்யும் பகைஞர்தங்கள்
வலிமைகுன்றி மாழ்கவே
மாநிலத்தில் இந்தியாநன்
மாண்புபெற்று வாழ்கவே. (பார) (129)

——

## வீரசுதந்திர நாள் என்ற தலைப்பில் மதுரைத் தமிழ்நாடு நாளிதழுக்கு வழங்கிய வாழ்த்துப் பாடல் (15-8-1967)

*[கண்ணிகள்]*

1 இமயம் முதலாய்க் குமரி வரையில்
இணைவுற்றின்புறு நாள்.
எழில்கொள் இந்த நாட்டின் ஒருமை
இசைக்கு மிங்கித நாள்

---

129 ஆவது பாடல்: 26 ஆவது வரி: மாழ்கவே - வருந்தவே

2 ஆரண வேள்விப் பூரண ஞான
அமுதம் பொங்கிய நாள்
அன்பும் பண்பும் அறிவும் அருளும்
அணைந் தியங்கிய நாள்

3 வெறுமை அடிமை மடமை கொடுமை
வெம்மை நீங்கிய நாள்
திறமை பொறுமை பெருமை உரிமை
செம்மை ஓங்கிய நாள்

4 கப்பல் வானந் தரையிட மெங்குங்
கமழும் நந்திரு நாள்
முப்படை வாழ்த்தும் பாட்டும் இசையும்
முழங்கும் ஓர் பெருநாள்.

5 நிகரில் உலகில் அரசினர் பலரை
நேசர் ஆக்கிய நாள்
இகல்செய் பகைஞர் இடரை மாய்க்கும்
இயல்பை ஊக்கிய நாள்

6 தாய்த்திரு நாட்டைக் காத்திட மக்கள்
சபதங் கொண்டெழு நாள்
தாரணி போற்றும் பாரத தேச
வீரசுதந்திர நாள் (130)

——

## "வண்ணத் தீபாவளி" என்ற தலைப்பில் மதுரைத் தமிழ்நாடு நாளிதழுக்கு வழங்கிய வாழ்த்துப் பாடல். (11-11-1966)

*[கண்ணிகள்]*

1 அகில மாந்தர்கள் அமைதி காணுந் தீபாவளி
அசுரர் தீவினை அகலும் நாளித் தீபாவளி
புகலும் மாதவர் பரவும்நாளித் தீபாவளி
புதிய ஆடைகள் புனைந்து போற்றுந் தீபாவளி

2 நாட்டில் நன்மைகள் காட்டும்நாளித் தீபாவளி
ஞாயிறு வருமுன் நன்னீராடுந் தீபாவளி
வீட்டிற் சிறுவர் சிறுமியர் விழையுந் தீபாவளி
வெடிகள் வெடித்து விளையாட்டயருந் தீபாவளி

3 பண்டம் பல்வகை உண்டுசுவைக்குந் தீபாவளி
பரமன் திருவருள் பாடிப்பயிலுந் தீபாவளி
அண்டர்கள் புகழும் பண்டிகையாமித் தீபாவளி
ஐப்பசி இருபத்தாறின் றொளிருந் தீபாவளி

4 தருமம் ஆதிய பெருமைதாங்குந் தீபாவளி
தமிழர் வாழ்வினில் அமுதம் எனநேர் தீபாவளி
வருடம் ஓர்முறை மலரும் இன்பத் தீபாவளி
மக்கள் மாண்புற வாழ்த்தும் வண்ணத் தீபாவளி.

——

## "தீபாவளித் திருநாள்" என்ற தலைப்பில் தமிழ்நாடு நாளிதழுக்கு வழங்கியபாடல் 1-11-1967)

[கண்ணிகள்]

1 தீபாவளித் திருநாள்–இந்தியநந்
தேசத்துக்கோர்பெருநாள்
தூபதீபமுறுநாள்- அனைவர்க்குஞ்
சோபனங்கள் தருநாள்

2 அல்முடிவில் எழுந்து – எண்ணெ முழுக்(கு)
ஆடி மனமகிழ்ந்து
நல்லுடைகள் புனைந்து–நமதிறை
நாதனைப்போற்றும் நன்னாள்

3 பாப இருள் கழியும்—மக்கள்மனப்
பண்பின்நிலை தெளியும்
தீபஅருள் பொழியும்— ஒளியெனும்
தெய்வத்தை வாழ்த்திடும் நாள்

4 பண்டம்பலபடைத்து-சுவைதரும்
பாலொடு பாகிணைத்து
தொண்டர்க்கினிதளித்து–தமருடன்
உண்டுகொண்டாடிடும் நாள்

5 அன்பரு ணேக்கிய நாள்—அசுரர்தம்
ஆணவம் நீக்கிய நாள்
துன்பிடர் போக்கிய நாள்—நமதருந்
தொன்மறை வாக்கியநாள். (132)

— —

## மதுரைத் தமிழ்நாடு வார இதழுக்குத் "தீபாவளித் திருநாள்" என்ற தலைப்பில் வழங்கிய பாடல்கள் (30-10-70)

*[நேரிசை வெண்பா]*

1 பாபாதி கன்மப் பழவினைகள் தீர்த்தருளும்
தீபா வளிப்பொன் திருநாளைப் - பூபாலர்
ஆண்பெண் அனைவருமே ஆர்வமுடன்
கொண்டாடும்
மாண் பொன்நாள் என்பேன் மகிழ்ந்து. (133)

2 விண்ணவர்க்குத் துன்பம் விளைவித்த ஓரசுரன்
மண்ணில் மறைந்தவொரு மாதினத்தை—
எண்ணெய்
முழுக்கிட்டுக் கொண்டாடி மூவுலகும் போற்றும்
அழுக்கல்நாள் என்றார்முன் ஆய்ந்து. (134)

3 கோடி உடுத்திக் குலக்கடவுள் தாள்போற்றிப்
பாடிச்சிற் றுண்டி பலஆக்கித்—தேடிவரும்
மன்பதைகட் கிட்டு மகிழ்ந்துண் டொளிர்ந்
திடலிவ்
இன்பநாட் சீரின் இயல். (135)

4 பாப இருட்படரைப் பாரின்கண் போக்குகின்ற
தீப ஒளிவீசுந் தெய்வநாள்– பூப்புனிதர்
போற்றுநாள் நன்மை புலருநாள் புன்மையெலாம்
மாற்றுநாள் என்பேன் வனைந்து. (136)

——

135 ஆவதுபாடல்: 3ஆவதுவரி: மன்பதைகள்-மக்கட்கூட்டம்.

136 ஆவதுபாடல்: 1 ஆவதுவரி: இருட்படர்– அஞ்ஞானமாகிய துன்பம் வருத்தம்.

,, 3 ஆவதுவரி: புலரும்நாள்- (புலர்தல்) விடிதல், தெளிதல் (தோன்றுதல்)

,, 3 ஆவதுவரி; புன்மை-துன்பம்

,, 4 ஆவதுவரி: வனைந்து- அலங்கரித்து

## தெய்வத் தமிழ்மொழி என்ற தலைப்பில்

### மதுரைத்தமிழ்நாடு வார இதழுக்கு வழங்கிய தமிழ்மொழி வாழ்த்துப் பாடல்

*[இராகம் செஞ்சுருட்டி தாளம் ஆதி]*

*[கண்ணிகள்]*

1 வாழ்க தமிழ்மொழியே—வளர்ந்தென்றும்
வாழ்க தமிழ்மொழியே
ஆழ்கடல் சுற்றிடும்பூ–தலம்புகழ்
சூழ்க தமிழ்மொழியே (வாழ்)

2 நம்பெருநாட்டினிலே—பிறந்தநன்
நால்வர்சொற் பாட்டினிலே—
கம்பன்செய் ஏட்டினிலே—கமழ்ந்ததுங்
கன்னித் தமிழ்மொழியே (வாழ்)

3 நீரில் நடந்ததுவும்- எறிதிரை
வாரி கடந்ததுவும்
பாரிற் படர்ந்ததுவும்-வெற்றிமிக்க
வீரத் தமிழ்மொழியே (வாழ்)

4 என்பைப்பெண் ணாக்கியதும்-வழுதியின்
துன்பத்தைப் போக்கியதும்
அன்பையுள் ளாக்கியதும்—பண்புயர்ந்த
இன்பத் தமிழ்மொழியே (வாழ்)

5 உள்ளமுவந் துலகோர்—தமொழியில்
தெள்ளிப் பெயர்த்தெடுக்கும்
வள்ளுவன் வான்குறளும்-மனங்கொள்ளை
கொள்ளுந் தமிழ்மொழியே (வாழ்)

6 நாகங் கடித்திறந்த—குழந்தையின்
நல்லுயிரைச் சிறந்த
தேகந்தனிற் பொருந்த-இசைத்ததுந்
தெய்வத் தமிழ்மொழியே. (வாழ்) (137)

— —

## மதுரைத் தமிழ்நாடு நாளிதழ் 15–1-1968ல் வெளிவந்த பொங்கல் மலருக்கு வழங்கிய பொங்கல் வாழ்த்துப்பாடல்

*[கண்ணிகள்]*

1 பொங்குக பொங்கலின் பால்பொங்குக
புதுமணப் பொலிவொடு தேன் பொங்குக
இங்கித மாமலர்ச் சுடர் பொங்குக
இறையருள் போற்றும்நம் இயல்பொங்குக

2 புதியநெல் அரிசியின் புகழ்பொங்குக
புத்தமு துண்டிடும் பொருள் பொங்குக
இதயமா மலரினில் கனம் பொங்குக
ஏருழுங் கால்நடை யினம்பொங்குக

3 உலகினில் உழவரின் நலம்பொங்குக
உணவுதன் நிறைவுறுந் துறைபொங்குக.
தலமெலாந் தமிழரின் அறம்பொங்குக
தயவுசீர்ப் பொறையெனுந் தரம்பொங்குக

4 மங்கலப் பொங்கலால் மணம்பொங்குக
மழையொடு கழனிகள் வளம் பொங்குக
திங்களஞ் சடையினன் வரம் பொங்குக
தீந்தமிழ் நாட்டினர் திறன் பொங்குக. (138)

——

மதுரைத் தமிழ்நாடு நாளிதழ் (14—1—1967)ல்
வெளிவந்த பொங்கல் மலருக்கு வழங்கிய
வாழ்த்துப் பாடல்

*[கண்ணிகள்]*

1 பொங்கல் பொங்குக பொங்கல் திருநாள்
பொங்கல் பொங்குகவே
பொங்கும் மங்களம் எங்கும் பொங்கிப்
பொங்குக பொங்குகவே

2 திங்கள் தைவரு முதல்நா ளின்று
பொங்கல் பொங்குகவே
தேனும் பாகும் பாலுஞ் சோறுந்
தினமும் பொங்குகவே.

3 தங்கத் தமிழர் இல்லந்தோறும்
செல்வம் பொங்குகவே
தாழ்மை கீழ்மை ஏழ்மை நீக்குந்
தருமம் பொங்குகவே

4 மங்கையர் மாண்பும் நிறையும் பொறையும்
மலர்ந்து பொங்குகவே
மாநில முழுதுங் காக்குங் கடவுள்
மகிமை பொங்குகவே

5 மயிலுங் குயிலும் மானும் ஆனும்
மலிந்து பொங்குகவே
வெயிலும் நிழலுங் கருதா உழுநர்
மேன்மை பொங்குகவே

6 வயலுங் குளமுங் காடும் நாடும்
வளர்ந்து பொங்குகவே
புயல்கள் இன்றி அளவாய் மழைகள்
பொழிந்து பொங்குகவே.

7 அல்லும் பகலும் இறையருள் போற்றும்
ஆர்வம் பொங்குகவே
அன்னை பாரத தேவியின் மக்கள்
ஆண்மை பொங்குகவே

8 நெல்லும் ஏனைத் தானிய வகைகள்
மல்கிப் பொங்குகவே
நெஞ்சில் நேர்மை நீதி உறுதி
நிறைந்து பொங்குகவே.

9 சித்தந் தெளிதரு முத்தமிழ் மொழியின்
சீர்மைபொங்குகவே

செந்தமி ழறிஞர் கவிஞர் கலைஞர்
திறமை பொங்குகவே

10 இத்தமிழ்நாடு பொங்கல் நன்மலர்
ஏற்றம் பொங்குகவே

இந்திய தேசப் பெருமை உலகம்
எங்கும் பொங்குகவே (139)

---

வாழ்த்துத் தமிழ்மலர்ப்பகுதி நிறைவுபெற்றது.

# பல்சுவைத் தமிழ் மலர்.

கோவிலூர் காசிவாசி (நடேச அடிகளார்) சுவாமிகள்
இயற்றிய
''நடேச தேசிக ரத்னமாலை''
*என்ற நூலுக்கு வழங்கிய சிறப்புப் பாயிரப் பாடல்கள். 13-5-70.*
*[நேரிசை வெண்பா]*

1 தேசிகயார் ஆய்வுகமழ் தெய்வ மணிமாலை
ஆசில் நடேச அடிகளார் — பேசினரால்
ஒல்லும் உயர்நெறிகள் ஒன்பான் நூற்
பாவென்னும்
வல்ல தலைப்பில் வடித்து. (1)

2 வல்லதலைப்பில் வடித்தெடுத்துக் காட்டு தமிழ்ச்
சொல்லால் பொருளால் தொகுகருத்தால் —
மல்குமிநூல்
செந்நெறியைக் காட்டும் சிவனடியிற் சேர்ப்பிக்கும்
உன்னதநூல் என்பேன் உணர்ந்து. (2)

——

1 ஆவது பாடல் 3 ஆவது வரி : ஒல்லும் - பொருந்தும்.
2 ஆவது பாடல் 2 ஆவது வரி : தொகு கருத்து - மறைந்து நிற்கும் கருத்துக்கள்.

*மதுரைத் தமிழ் நாடு நாளிதழின் கீலக ஆண்டு சித்திரைத் திங்கள் முதல்நாள் வெளியீட்டுக்கு (3-4-68)*

## "புத்தாண்டு வாழ்த்து"

**என்ற தலைப்பில் வழங்கிய பாடல்கள்.**

*[நேரிசை வெண்பா]*

1 நேயமறை ஓதல் நிலங்காத்தல் நேர்வணிகம்
தூயவே ளாண்மைத் தொழில்மலர – வாயிரந்து
வேண்டாமல் நன்மை மிளிரப்பொற் கீலக
ஆண்டேநீ வந்தெம்மை ஆள். (3)

2 பாவலர்தம் பாட்டும் பயில்வார் இசையொலியும்
நாவலர்தம் வாழ்த்தும் நனிசிறக்கப் – பூவுலகில்
தூண்டா மணிவிளக்காய்த் தோன்றும்பொற் கீலக
ஆண்டேநீ வந்தெம்மை ஆள். (4)

3 வானம் பொழிய வயல்தோறும் நெல்விளைய
தான தருமந் தழைத்தொளிரத் – தேனமுதம்
மீண்டாற்போல் மக்கள் விரும்பும்பொற் கீலக
ஆண்டேநீ வந்தெம்மை ஆள். (5)

——

*இந்நூலாசிரியர், 1926 ஆம் ஆண்டு, பர்மாவிலிருந்து தாய் நாட்டுக்குப் பிரயாணமான காலத்தில் இரங்கோன் தனவைசிய இளைஞர் தமிழ்ச் சங்கத்தாரால் நடத்தப்பெற்ற பிரிவு உபசாரப் பாராட்டுக் கூட்டத்தின்கண் பிரிவாற்றுமை குறித்து*

## 'நட்பின் மொழி கூறல்'

**என்ற தலைப்பில் பாடிய பாடல்கள்.**

*[நேரிசை வெண்பா]*

1 இம்மை மறுமை இயையிளைஞர் சங்கத்துச்
செம்மைச் சகோதரர்கள் சேர்துணைவர் —
தம்மைப்
பிரிதல் குறித்துமனம் பேசுதமிழ்ப் பாக்கட்(கு)
அரியதுணை முன்னோன் அருள். (6)

*[எழுசீரடி ஆசிரிய விருத்தம்]*

2 நலந்திகழ் செந்நெல் நவமணி கொழிக்கும்
நறியதண் பர்மிய நாட்டிற்
பொலந்திக ழிரங்கோன் பசுந்தன வணிகப்
பூந்தமிழ்ச் சபையினிற் றமியேன்
கலந்தபே ரன்பின் பெருக்கினு லீண்டு
கவினுறு மெனதுதா யகத்தின்
நிலந்தனைக் காணப் பிரிந்திடல் குறித்து
நீக்கமில் துயர்மிக நிறைந்தேன். (7)

---

6 ஆவது பாடல் : 4 ஆவது வரி : முன்னோன் – கணபதி.

7 ஆவது பாடல் : 3 ஆவது வரி : பொலம் – அழகு.

3 இங்கிருந் துங்கள் இணைதனைப் பிரிந்தே
எனதகம் புக்கினும் எழில்சேர்
மங்கல இரங்கோன் மணிநகர் மறவேன்
மதன்நிகர் உங்கணல் வதனத்
திங்களை மறவேன் தேன்மொழி மறவேன்
சீரிய நட்பும்யான் மறவேன்
சங்கரன் அருளால் வளருநங் கழகந்
தன்னையும் மறக்கிலேன் சரதம். (8)

4 நம்முடைக் கழக நறுஞ்செயற் கடல்சூழ்
நாடெலாம் பரவநல் விளைஞீர்
உம்முடைக் கடன்கள் நெறியுட னியற்றி
உயர்ந்தநம் பெருஞ்சபைத் தலைவர்
தம்முடை வாக்கின் மொழிப்படி நடப்பீர்
சார்ந்தபே ரொற்றுமை வளர்ப்பீர்
எம்முடை வார்த்தை உங்களுக் கிவையே
ஈண்டுநான் கனிவுட னிசைத்தல். (9)

5 பண்டையப் புகழ்சேர் பசுந்தன வணிகப்
பாலர்கள் சபையினிற் பங்கு
கொண்டவர் தமக்கும் பேரபி மானங்
கொண்டவர் தமக்கு மற்றுள்ள
எண்டிசை வளரும் மக்களுக் கெல்லாம்
எனதுவந் தனமினி தியைக
வெண்டிரை கொழிக்கும் பெருங்கட லுடுத்த
மேன்மையார் வியனுலகினிலே. (10)

---

8 ஆவது பாடல் : 4 ஆவது வரி : மதன் - மன்மதன்

6 தண்டமிழ் வளனுஞ் சைவத்தின் மணமுஞ்
சமுகமுன் னேற்றமும் பரத
கண்டத்தின் நலனும் இளைஞர்கள் உயர்வுங்
கடும்புலான் மறுத்தலுங் கருத்திற்
கொண்டநங் கழகம் வளர்பிறை மதிபோற்
குவலயந் தன்னிலே ஒளிர
அண்டர்தந் தலைவன் இளமயின் முருகன்
அருண்மல ரடியிறைஞ்சுவனே. (11)

——

## அறிஞர் அண்ணா அவர்களின்

*சிறப்பியல்புகள் பற்றியும் அவர் தம் ஆட்சியின் மேன்மை பற்றியும் அவரின் ஆட்சிக் காலமாகிய 1967ல் பாடியது.*

**(அறிஞன் ஒருவன் தம் கொள்கையினின்றும் மாறுபட்ட தன் தம்பியை நோக்கிக் கூறுமுகத்தான் இப்பாடல் ஆக்கப் பெற்றது )**

*[நல்ல நல்ல பிள்ளைகளை நம்பி என்ற பாடலின் இசைத்தழுவல் ]*

[பல்லவியும் அனுபல்லவியும்.]

நம்மள் அண்ணா ஆட்சிமுறை நம்பி — தமிழ்
நாடேகொண் டாடுது தம்பி — வெறும்
பொம்மலாட்டக் கொள்கையிற்குழம்பி — இடர்
புரிந்தால்நீ எண்ணவேண்டுங் கம்பி (நம்)

[சரணங்கள்.]

1 கொம்பை நம்பிய கொடியைப் போலவும்
கொடியை நம்பிய தளிரைப் போலவும்
தளிரை நம்பிய மலரைப் போலவும்
தாயை நம்பிய சேயைப் போலவும் (நம்)

2 மண்ணை நம்பிய மரத்தைப் போலவும்
மரத்தை நம்பிய பழத்தைப் போலவும்
பண்ணை நம்பிய பாட்டைப் போலவும்
பாட்டை நம்பிய ஏட்டைப் போலவும் (நம்)

3 இதய வாசலில் இனிமை தங்கிடும்
எளிய மக்கள்பாற் கனிவு பொங்கிடும்
உதய சூரியன் ஒளி விளங்கிடும்
ஒளியி ளேடுசெந் தமிழ்முழங்கிடும் (நம்)

4 உண்மை நேர்மையில் உறுதிகொண்டவர்
உழவர் சேவையின் உயர்வு கண்டவர்
பண்மை மிக்கசொற் கலைபயின்றவர்
பகைவர் போற்றிடப் பழகுகின்றவர் (நம்)

5 தேச நன்மையிற் சிறை புகுந்தவர்
சேவை செய்வதிற் றிறன் மிகுந்தவர்
மாசில் காஞ்சியம் பதி பிறந்தவர்
வாழ்வு தாழ்விலும் மனம் நிறைந்தவர் (நம்

6 வளருந் தென்னக மக்கள் நாட்டவர்
மலிவு ஊண்பெற மான்யங் கேட்டவர்
ஒளிருந் தாய்த்தமிழ் உணர்வை மீட்டவர்
ஒரு ரூபாய்ப்படி அரிசி போட்டவர். (நம்)

7 அரசில் மக்கள்தம் அறிவை ஊக்கிய
அருமை சான்றபொற் கழக வாக்கிய
முரச வாழ்த்தொலி பெருசி லாக்கிய
முறையிற் ஞேன்றியுட் குறைகணீக்கிய (நம்)

8 அடிமை வாழ்வினைக் கடியும் நன்மனம்
ஆசை நேசரோ டமைதியாய்த் தினம்
மிடிமை நீள்துயர் மடியநல்லினம்
விரவு மாறருள் பரவுவான்கனம். (நம்)

9 நற்படை குடி கூழரண் தொகை
நட்பமைச் செனும் ஆறுநல் வகைப்
பொற்குறள் விதி முறையினுட்பகை
போக்கி மக்களைக் காக்கும் ஆண்டகை. (நம்)

10 நாட்டின் தீவினை நவை சிதைந்திட
நம்மள் உண்பொருள் விலை குறைந்திட
கூட்டு பல்பொருள் அணிகுவிந்திட
குறுகும் வாழ்வியற் குறை மறைந்திட (நம்)

11 நாற்றி சைக்கணும் நலிமை நீங்கிய
நல்ல நந்தமிழ் நாட்டிற் றேங்கிய
ஆற்றல் மிக்கநுண் ணறிவில் ஓங்கிய
அமைச்சர் பேரவைத் தலைமை தாங்கிய (நம்)

12 புயல் பொழிந்துதண் புனல்கள் நீளவும்
பொருது போர்வினைப் பொய்மை மாளவும்
வயல்கள் தோறும்நல் விளைவு சூழவும்
மலரும் பொன்னருள் மருவி வாழவும் (நம்)

13 அன்பகப் பொருள் பண்புதேடவே
ஆண்ட வன்னிடம் அருளை நாடவே
இன்ப மக்களோ டினிது கூடவே
இலக்கு வன்றமிழ் எங்கும் பாடவே. (நம்) (12)

——

*மதுரைத் தமிழ் நாடு வார இதழ் 9–10–1970. வெளியீட்டுக்கு*

## "அன்பொன்றே சிவம்"

**என்ற தலைப்பில் வழங்கிய பாடல்.**

*[இராகம் – பிலகரி – தாளம் – ரூபகம்.]*

[பல்லவி.]

அன் பொன்றே சிவம்
அல்லா தவுயிர் எல்லாமே சவம் (அன்)

*[அனுபல்லவி]*

தென்புறு வாய்மை பொறையொழுக் கங்கல்வி
சேரும்-முற்பவம்-மாறும்-மெய்ப்பொருள் (அன்)

*[சரணங்கள்]*

1 இன்பநல் வாழ்வி னியைபுக்கோ ராதரம்
எங்கும்வி ளங்கிவ ழங்குஞ்சகோ தரம்
துன்பவி னையகன் றேங்கிடுமே யுரம்
துரிசறு நில—வுலகினிலிரு
ளிரிதருமொளி—பெருகியதிரு (அன்)

2 மக்கள்தம் பண்பின் வழிநன்க மைத்திடும்
வானவர்க் கும்இல்லா மாண்பையி ணைத்திடும்
தக்க பெரும்புகழ் தாங்கித் தழைத்திடும்
தமிழணியுறு—தொடைமலரியல்
இமிழிசைபில—கரிமருவிய (அன்)
(13)

——

இரண்டாவது உலக யுத்த காலத்தில் பர்மா, மலேயா, அந்தமான் தீவுகள் முதலிய பிரதேசங்களெல்லாம் ஜப்பானியர் வசமாகி சென்னை நகரில் ஜப்பானியரால் குண்டுவீசப்பெற்று சென்னைத் தலைநகரம் தற்காலிகமாக கோயம்புத்தூருக்கு மாற்றப்பெற்ற காலமாகிய

1943-ஆம் ஆண்டு இறுதியில்

"இறுதி வெற்றி நமதே"

*என்ற பொருள்எழ வெற்றி நிச்சயமே என்ற தலைப்பில் பாடியது.*

குறிப்பு: *அக் காலத்தில் புதுக்கோட்டைச் சமஸ்தானத் தேசிய யுத்த முன்னணி நிலையத்தாரால் வாரந்தோறும் வெளியிட்டுவந்த யுத்தக்குறிப்புகள் அடங்கிய சஞ்சிகையின் 8-1-1944 இதழில் இப்பாடல் வெளி வந்தது.*

### வெற்றிப் பாடல்

(*இராகம்-பிலகரி தாளம் ரூபகம்*)

(*பல்லவி*)

வெற்றி நிச்சயமே—இறுதி
வெற்றி நிச்சயமே

[*பல்லவிச் தொடர்*]

விரியுலகப் போரினிலே
நமதரசர்க் கேயிறுதி (வெற்)

வீங்குநன்மை உலகோங்கும்
ஆங்கிலேய அரசாங்க (வெற்)

வீசுநீத மேவுபாச
மாசிலாநம் நேசதேச (வெற்)

வீரன் அதி சூரன்போர்த்
தீரன்லார்ட் மவுண்ட்பாட்டன் (வெற்)

விரிதருகட லெறிதிரைவெளி
தரையினிலடு சமரினிலினி (வெற்)

[அனுபல்லவி]

சுற்று மலர்க்குழற் ஶ்ரேகைமயிலியல்
சுந்தரியே கனலெறியம
ரந்தமதில் நமதுமன்னர் (வெற்)

[சரணங்கள்]

1 சத்தியம் நீதி தயைபொறை நேர் நயம்
தாங்கும்நே சக்கட்சிக் கேமுடிவிற் ஜெயம்
நித்தியம் வாழ்வில் நிலைவுறுமே வியம்
நீடும்புகழ் கூடும்மனம்
நாடும்நம தரியநேசர் (வெற்)

2 அம்புவி யைப்பங்கிட் டாண்டிடும் வண்ணம்
அச்சு நாட்டுக்காரர் கொண்டன ரெண்ணம்
நம்பும்நே சச்சேனை யால்மாய்வர் திண்ணம்
நாளஃதே வரும்விரைவினில்
வாளொடுவாள் பொருதிடுசமர் (வெற்)

---

14 ஆவது பாடல்: 5 ஆவது வரி:: வீங்குதல்– மிகுதல்.
,, 11 ஆவது வரி: வெளி - ஆகாயம்
,, 18 ஆவது வரி: வியம் - பெருமை (வியன் என்றசொல் இயைபுநோக்கி வியம் எனத்திரிந்தது(

3 துள்ளிய மாடு பொதிகமக் கும்என்ற
தொன்மைச்சொல் பொய்க்குமோ
பன்னிலத்தை வென்ற
தெள்ளிய நெப்போலி யன்முடிந் துசென்ற
சேதியினைத் தெரிவாய் மனம்
ஓதியுணர்ந் தறிவாய்நம் (வெற்)

4 துன்பமெ லாமகன் றின்பம்வி ளைத்திடும்
தூயசு பீட்சநல் வாழ்வையி ணைத்திடும்
அன்பனி லக்கும ணன்சொற் றழைத்திடும்
அழகியதமி ழிசைமருவிய
பிலகரியொடு விறன்முரசொலி (வெற்)
(14)

——

## சிறுமிகள் கோலாட்டப் பாடல்.

### இப்பாடல் கொப்பனுபட்டிக் கலைமகள் கல்லூரி ஆரம்ப காலத்தில் அக்கல்லூரி மாணவிகட்காக இயற்றி வழங்கப்பெற்றது.

*[இராகம் - பியாக் — தாளம் ஆதி]*

*[பல்லவி]*

வாணி பதம் — போற்றி
வாழ்த்திக்கோ லாடிடுவோம் (வாணி)

*[அனுபல்லவி]*

வாணி பதம் — யாழ்ப்
பாணி பதம் — கான
வேணி பதம் — போற்றி
வாழ்த்திக்கோ லாடிடுவோம் (வாணி)

---

15 ஆவது பாடல் 4 ஆவது வரி: கான (கானம்) மணம் நிறைந்த,
,, 5 ஆவது வரி: வேணி - பின்னற் சடையுடைய கலைமகள்,

*[சரணம்]*

1 பேணும்நம் வாழ்க்கைநலன் பெருகஅருள்
தேடிடுவோம்
பேதைக்குணம் அகற்றி மேதையென்னும்
ஏடிடுவோம்
ஆணவம் வெகுளிநீக்கி அன்பின் துறை
நாடிடுவோம்
ஆய்ந்த இசைத்தமிழ்ப்பண் அகிலமெங்கும்
பாடிடுவோம்

*[பல்லவித் தொடர்]*

ஞானமதே—எங்கள்
நாட்டமென வுரைப்போம் .. (வாணி)

*[சரணம்]*

2 பாராளு மன்னர்புகழ் பண்புடனே கூறிடுவோம்
பல்கலைக்கழகநற் பரீட்சை யெல்லாந் தேரிடுவோம்
நேரான நம்சமூகச் சீர்திருத்தப் போரிடுவோம்
நேயமாய்ப் பாலர்கட்கு நால்வர்களின் பேரிடுவோம்

*[பல்லவித் தொடர்]*

உலகமெலாம்—கல்வி
ஓங்கி உயர்க என்றே—(வாணி)

*[சரணம்]*

3 கண்ணன் நிகர் மகாத்மா காந்தி
பதம்போற்றிடுவோம்
கவிதாகூர் நந்தமிழ்ப்பா ரதிபெருமை
சாற்றிடுவோம்

நண்ணுஞ் சரோஜனி போ லெண்ணருந்
தொண்டாற்றிடுவோம்
நாட்டினிடையே அறிவுச் சுடர் விளக்கை
ஏற்றிடுவோம்

*[பல்லவித் தொடர்]*

கலைமகளின்—நாமக்
கல்லூரி வாழ்க என்றே (வாணி)

*[சரணம்]*

4 மண்டலம் போற்றும் உவேசாமிநாத
மறைநெறியார்
வள்ளல்ரா ஜாஸர்தேச மக்கள்தம் அன்பிற்குரியார்
தண்டமிழ்ப் புலமைசான்ற பண்டிதமணிப் பெரியார்
சாந்தமெய் யப்பசீலர் தமிழிசை அகம்பிரியார்

*[பல்லவித் தொடர்]*

சந்ததமும்—பேரா
னந்தமாய் வாழ்க என்றே (வாணி)

*[சரணம்]*

5 மந்தார நறுமலரை வானவர்தி னஞ் சொரியும்
மாண்புள்ள பாண்டிவள நாட்டினிடையே விரியும்
செந்தே ஞெலிக்கும் வாசப் பங்கயச்
செய்யாணிறையும்
செல்வர்கள் சூழுந் தெய்வத் திருநகர்வே
ஹுருறையும்

---

15 ஆவது பாடல்: 9ஆவதுவரி: ஆணவம்—அகங்காரம், செருக்கு-
,, ,, வெகுளி - க்ஷோபம், வெறுப்பு

*[பல்லவித் தொடர்]*

இலக்குமணன் கூறும்
இனிய தமிழ்ப் பாடுவோம் (வாணி) (15)

——

## மதுரைமா நகரத்தின் சிறப்புப்பற்றிக் கணவன் தன் மனைவியிடம் நகரின் வெளிப்புறத் திருந்து சுட்டிக்காண்பித்துக் கூறுமுகத்தான் இப்பாடல் இயற்றப் பெற்று நாடக நடிகர்கட்கு வழங்கப்பெற்றது.

*[இராகம் - அடாணு - தாளம் ரூபகம்]*

*பல்லவி*

மானே அதோ பார்மதுராபுரியே – என்றன்
மையல் தனக் கிசை
தையலே ஆருயிர் (மா)

*[அநுபல்லவி]*

மீனாட்சிசொக் கேசர்கோ யில் ஸ்தூபி
மிளிர்மங்கல – எழில்பொங்குபொன்
ஒளியிங்கித மறிவாய் மணி (மா)

*சரணங்கள்*

1 அறுபத்து நான்கு திருவிளை யாடல்கள்
ஐயன் புரிந்ததின் நகரம்–அதோ
அம்பொன் மணிமுடி யோடுதோன்றுதல்
அழகிய நான்கு பொற் சிகரம்

ஆடும்பேரம்பல நாதசங் கீதம்
ஆயிரக் கான்மண்டபத்தின்விநோதம்
தேடும்பொற் ருமரை வாவியின் நீதம்
தெரிவாய் மன மினிதாகவே
அரி சூழ் மல ருறு சீரடி (மா)

2 முன்செய்த தீவினை யெல்லாமகற்றுநன்
மோட்சவை கைநதியுண்டு—இந்தத்
தென்மது ராபுரி யோரத்திலே என்றன்
சேயிழையே களி கொண்டு
மன்னரின் செங்கோல் வளர்பாண்டி நாடு
மாண்புறும் வேலூர் மணிநகர் வீடு
நன்னய மார் லக்ஷ்ம ணன்றமிழ்ப்பாடு
நகைமாமதி முகசேகரி
சுகவாரிதி யெனதாருயிர் (மா) (16)

——

16 ஆவது பாடல்: 4 ஆவது வரி: ஸ்தூபி – கோபுரத்தின் உச்சி
,, 10 ஆவது வரி: சிகரம் - கோபுரம்
,, 15 ஆவதுவரி: அரிசூழ் - வண்டுமொய்க்கின்ற

## ஒருவேடுவன் தான் வேட்டைக்குச் செல்லும்போது பாடுகின்ற இப்பாடல் நாடக நடிகர்க்காக இயற்றி வழங்கப்பெற்றது.

*]இராகம் அடாணு - தாளம் ரூபகம்.]*

*[பல்லவி]*

வீரமுடனிந்தச்
சாரங்கத்திற்கணை பூட்டி–வன
வேட்டைசெய் வேனிந்தக்
காட்டினிலே உயிர்வாட்டி (வீர)

*[அனுபல்லவி]*

கோரஞ்செய்யுமென்வா ளாயுதத்தைத் தீட்டிக்
கொல்லுஞ் சுடரொளி தள்ளுங்கனல்மூட்டி (வீர)

*[சரணங்கள்]*

1 ஆரவா ரஞ்செய்யும் மாடப்புருக்களின்
நேராய்ச்—சென்றே
ஆர்த்தவை யைக்குறி பார்த்தெய்வே
நானிரு கூருய்
தீரமுடன்ருவுஞ் செம்மானி னந்தேடிச்

செல்வே னவையுயிர் கொல்வேன் விரைந்தோடித்
தாரினங்கண்மிகும் பாரவனம் நாடிச்
சரியாய்வதை - புரிவேனுயிர்
கரியாகுநல் எரியூட்டிய (வீர)

2 செல்லும்வின் பட்சிக்கு மூாங்களின்
பேருடல் தீய்ப்பேன்—வரும்
வல்லியமாதி விலங்கினங்களுயிர்
மாய்ப்பேன்

வெல்லுஞ்சிங் கம்வரி னும்நான் வெட்டிச்சாய்ப்பேன்
வேண்டும் பறவைகள் தாண்டாவலே கோப்பேன்
அல்லும்ப கலுமிவ் வல்வனேயே பார்ப்பேன்
ஆர்வத்துட னேயிக்கடு
நேரத்தினி லேநிற்பய வீர) (17)

——

## இந்நூலாசிரியரால் இயற்றப்பெற்று

நூல்வடிவில் வெளிவந்துள்ள திருநீலகண்ட நாயனர் என்ற நாடகத்தை 1942ல் பயின்று ஊர்கடோறும் நடித்துவந்த புதுக்கோட்டைபாய்ஸ் கம்பெனி நடிகர்கட்கு அந்நூலில் இடம்பெருத இதனடியிற் கண்ட பாடல் ஒன்றும் இதையடுத்துள்ள வேறு இரண்டு பாடல்களும்புதிதாய் 1942ல் எழுதி வழங்கப்பெற்றன.

*திருநீலகண்டர் என்ற நாடகத்தில் திருவோடு காணமற் போய்விட்ட பிறகு சிவயோகியாராகிய நித்தியானந்தர் திருநீலகண்டரிடம் தன் திருவோடு பற்றிக் கோபக்குறியுடன் பாடும் பாடல்*

*[இராகம்-மத்தியமாவதி தாளம் ஆதி]*

*(பல்லவி)*

என்னுடைய திருவோட்டை எவ்விடத்தில்
வைத்துக்கெடுத்தாய்—அதனை நீ
யாருக் கெடுத்துக் கொடுத்தாய் (என்)

*[அனுபல்லவி]*

உன்னுடைய ஜாலமெல்லாம்
முன்னே எனக்குத் தெரியும்
உனது திருட்டுத்தனம்
அனைத்தையும் கண்டறியும் (என்)

*[சரணங்கள்]*

1 ஒன்னலர் கவர்வரென எண்ணியே எனதுதிரு
ஓட்டை உன்னிடந் தந்தேன் – அதனால்மன
வாட்டமடைந்து நொந்தேன்
பின்னஞ்செய்தி டாமலேயான்
முன்னேதந்த திருவோட்டை
என்னிடம் தராவிடிலோ
உன்னைவிட மாட்டேன்கண்டாய் (என்)

2 பொன்னையும்பூ மியையுமென் மண்ணோடு
தனைநிகர்க்கும்
பொருளெனக் கூறமுடியா – என்றுமுன்
புகலவில்லையா கொடியா
என்ன காரியஞ் செய்தனை
ஈதுனக்கு முறையா
இடித்துப் பன்முறை முனம்
படித்துச் சொல்லவில்லையா (என்)

3 எஞ்சிய பொருளெலாமுன் மஞ்சுவீட்டினிலிருக்க
இதுமட்டும் எவ்வாறேகும் – அகன்றதென்ப
தது பேரபத்த மாகும்
தஞ்சமென் றுன்னிடந்தந்த
விஞ்சுபுகழ் திருவோட்டை
வஞ்சித்து மறைத்துக்கொண்டே
அஞ்சலி செய்கிருய்மிக்க (என்)

4 வாட்டமில் சிவனடியார் கூட்டத்துட்
சிறந்தோனென்றே
மனம்நம்பி மோசம்போனேன்—அதனால்மெத்த
மயங்கித் தியங்கலானேன்
நாட்டினர் மிகவிரும்பிக்
கேட்டிடும் இலக்குமணன்
பாட்டினைப் படித்துலகில்
ஈட்டியே உன்னிடந்தந்த (என்) (18)

——

*திருநீலகண்டர் நாடகத்தில் சிவயோகியாராகிய*

## நித்தியானந்தரும் திருநீலகண்டரும்

*திருவோடு சம்பந்தமாய்த் தருக்கிக்கும் முறையில்*
*இராகமாலிகையில் இராகங்களின் பெயர்களும் பாடலில்*
*அமையுமாறு இணைத்து இயற்றி வழங்கிய பாடல்.*

*[இதன் கீழ்வரும் எல்லா அடிகளுக்கும் தாளம் ரூபகம்]*

*[இராகம் கேதாரம்[*

*[பல்லவி]*

நித்தியா: எனக்காதார மான மட்கலம்—அதற்
கீடிலை நீடுவிண் ணுடதுமே (என)

*[அனுபல்லவி]*

உனக்கேனிந்த பெருமித நெறியுன்
உள்ளத்தில்ஞானம் எள்ளத்தனையுமிலை (என)

---

18 ஆவது பாடல்: 8 ஆவதுவரி: ஒன்னலர் – பகைவர்.
,, 22 ஆவதுவரி: மஞ்சு– மச்சு என்பதன் திரிபு.
(மச்சு, மேன்மாடி)

*[பல்லவி]*

திருநீல: மனக்கிலேசம் வேண்டாமையா – தவ
வாணபொன் ஞேடுசெய் தேதருவேன்(மன)

*[அனுபல்லவி]*

வனக்கேதார மலையினிலரிய
மாதவம்புரி நாதனேயினிவீண் (மன)

*[சரணம் இராகம் தோடி]*

நித்தியா: புலத்திற்கின் பஞ்செய் யென்றன்
நிலத் தோடின்றியிவ் வீரேழ்
தலத்துஞ் செம்பொற் கலத்தும்ஆசை
தரியேன் உன்செயல் புரியேனீவாய் (என)

திருநீல: மனத் தாற்றில் தீமையில்லேன்
மாணவ்வோடு கவர்ந்தேனல்லேன்
சினத்தைநீக்கி எனது நேர்மை
தெரிவீர் மன்னித் தருள்வீரென்னை (மன)

*[சரணம்-இராகம் மோகனம்]*

நித்தியா:- இன்பநல் மோகன வார்த்தையில் தேர்ந்தே
ஏமாற்றப் பார்க்கின்ருய் என் முகங்கூர்ந்தே
அன்பனி லக்குமணன் றமி ழோர்ந்தே
அக–மகிழ்–வுட–னென
தருங் – கலந் தரு – குவாய் (என)

---

19 ஆவது பாடல்: 1 ஆவது வரி: மட்கலம்-மண்ணுலாகிய உண்கலம் பாத்திரம்.
,, 3 ஆவது வரி: பெருமிதம் - செருக்கு
,, 10 ஆவது வரி: நிலத்தோடின்றி (நிலத்து ஓடு) அதாவது மண்ணுலாகிய ஒடு அல்லாமல்.

திருநீல:- வஞ்சமொன்றில்லை மருளில்லை சினமே
வாய்ந்தமுனி மறையாள இத் தினமே
துஞ்சலில் நின்னருள் தோற்றுமென் மனமே
சுத்தமென் றித்ததி
சத்தியம் புரிகுவேன் (மன) (19)

---

*அடைக்கலமாக அளித்த திருவோட்டைத் தரவும் மறுக்கின்ருன் தன்மனைவி கையைப் பிடித்து வாவியில் முழுகிச் சத்தியஞ் செய்து தரவும் மறுக்கின்ருன் என்று நித்தியானந்தர்*

## திருநீலகண்டர் பேரில் தில்லைவாழ் அந்தணர்

*மன்றத்தில் வழக்குரைக்க திருநீலகண்டர் அம்மன்றத்தில் அதற்குப் பதில்கூறும் முறையில் இயற்றி வழங்கிய பாடல்.*

*[இராகம் ஆரபி தாளம் ஆதி]*

*(பல்லவி)*

பூதலமேபுகழும்—தில்லை
மாதல பூசுரரே—பெரும் (பூ)

*[சரணுனுபல்லவி]*

1 ஆதர மாயிவரோ டளித்தது முண்மை
அப்பொருள் மாயமாயில் அகன்றதுமுண்மை
மாதென் மனையாளின்றி வண்புனலில் யான்மூழ்கி
வருவேன் - சத்தியஞ் செய்து
தருவே னென்றது முண்மை (பூ)

---

19 ஆவதுபாடல்: 24 ஆவதுவரி: துஞ்சலில்-அழிவில்லாத
,, 17 ஆவதுவரி: மோகனவார்த்தை-மனதை மயக்கக் கூடிய வார்த்தை

2 எண்ணுமென் மனத்தினிலிலை யொன்றுந் தவறே
ஈசனலாலிச் செயல் அறிகுநர் எவரே
வண்பொற்கலமும் பெற மறுத்தனர் இவரே
வாழ்த்தும் லக்ஷமணன் றமிழ் வளர்
மறையவரே (பூத) (20)

——

## பவளக்கொடி நாடகத்தில் கிருஷ்ணன் அருச்சுனன் இருவர் முன்பாக அருச்சுனனைச் சுட்டிக்காட்டி அல்லி பாடுதல்.

**இப்பாடல் நாடக நடிகைக்கு எழுதி வழங்கப் பெற்றது.**

*(அன்னை என்பவள் நீதானு என்ற (சினிமா) பாட்டிசைத் தழுவல்)*

*(கண்ணிகள்)*

1 தந்தை யென்பவர் இவர்தானு
தனயன் அவனும் மகன்தானு
பந்த பாசம்இல்லா இவரின்
பண்பும் என்ன சரிதானு—(தந்)

2 உத்தம மான குண சீலன்
உருவில் இவரை நிகர்பாலன்
இத்துணை நாளிங் கேங்கி மெலிந்த
புத்திர னென்னுயிர் போன்றபுலந்திரன் (தந்)

3 மனைவிய ரிவர்க்குப் பலருண்டு
வழிவந்தவரோ சிலருண்டு
வழியினர் வாழ்வில் நினைவொன்றிலையேல்
வாழ்க்கையிலென்ன பயனுண்டு (தந்)

4 வருடம் ஒருமுறை வந்தாரா
மழலை யின்ப நுகர்ந்தாரா
பெருகிய அன்பு தவழும்பிள்ளைப்
பருவங் கண்டு மகிழ்ந்தாரா (தந்)

5 மைந்தனைத் தழுவி யெடுத்தாரா
மகிழ்ந்து முத்தங்கொடுத்தாரா
பைத்தமிழ்நாட்டு லக்ஷ்மண கவிஞன்
பாட்டமுதூட்டி வளர்த்தாரா (தந்) (21)

——

பூஞ்சோலைக்கண் ஒரு ஆடவன் ஒரு அழகிய பெண்ணைப் பார்த்து வருணித்தல்.

## இப்பாடல் நாடக நடிகர்க்கு எழுதி வழங்கப்பெற்றது.

*இராகம் பைரவி தாளம் ஆதி)*

*(பல்லவி)*

பொங்கும் அலங்காரப் பூமயிலாள்— புவி
புகழ்-தரும்-இளம்-பருவ அழகி இவள்— (பொங்)

*[அனுபல்லவி]*

கங்குலினேர் குழல்–செங்கனிவாயிதழ்
நங்கைசெவ்வேல்விழி மங்கையிணையிலெழில் (பொங்)

[சரணங்கள்]

1 நாமகளோமலர்ப் பூமகளோ விஞ்சை
யாமகளோ இப்பூங் காமகளோ அறியேன் (பொங்)

2 நாட்டினிலே சங்க ஏட்டினிலே அக
வீட்டினிலேஇசைப் பாட்டினிலே கமழ்ந்து
(பொங்) (22)

——

## காதலன் ஒருவன் தான் அடைய விரும்பும் பெண் ஒருத்தியின் அழகைப் பற்றித் தன் தோழனிடம் சிறப்பித்துக் கூறுதல்.

(கட்டித் தங்கம் வெட்டி எடுத்து என்ற சினிமாப் பாட்டிசைத்தழுவல்)

[கண்ணிகள்]

1 கட்டுத் தேன்கைப் பற்றிஎடுத்து
காதல் என்னுஞ் சாறுவடித்து
கொட்டிஅழகில் நான்முகன் செய்த பிம்பமடா
கொழு கொழு வென்னும் இவள்தனமிரு
பொற்கும்பமடா... (கட்)

2 உழலும் இடையாள் மதனின்சின்னம்
உருவு காட்டுபொன் ஆடியின் கன்னம்
தழலிலுருக்கிய பத்தரை மாற்றுத் தங்கமடா
தளிரியல் பொங்கி வழிதரு மிவளின் அங்கமடா(கட்)

23 ஆவதுபாடல்; 4 ஆவதுவரி: கும்பம்-குடம்

3 பத்தோடாறு வயதுப் பருவம்
பார்த்துப் பார்த்து ரசிக்கும் உருவம்
பழகுமெனக்கிவள் மாமன் மகளெனும் பந்தமடா
பலகலைதேர்ந்த இவள்முகமலரர விந்தமடா. (கட்)

4 பட்டுமெத்தை தன்னி லமர்ந்து
பவளவாயித ழுண்டு மகிழ்ந்து
தொட்டுத் தொட்டுப் பேசுவதே ஆனந்தமடா
சுரிகுழல் வேற்கண் மணிமாதினியென்
சொந்தமடா. (கட்)

5 நாட்டிற் றேன்றும் பேரெழில் நங்கை
நளினமாமயில் நிகர்மண மங்கை
பாட்டில் லக்ஷ்மணகவிஞன் சொல்லும் பாவையடா
பளபளவென்றே ஒளிதரும் வண்ணப் பூவையடா.
(கட்) (23)

---

## காதலன் காதலியை நோக்கிக் கூறும் காதற்பாட்டு.

*[நாடக நடிகர்க்கு எழுதி வழங்கியது]*

*[பல்லவி]*

மாதரசி என்றன்
மையல்தீர்ப் பாய் சரசி (மா)

*[அனுபல்லவி]*

மாதரசி—தேவ
மாதரசி பூவில்
வாழரசி—என்றன்
மையல்தீர்ப் பாய்சரசி (மா)

*[சரணம்]*

1 பூதலந் தன்னி லுள்ளோர் போற்றுமென்றன் பாங்கியே
புண்யலா வண்யநற்கா ருண்யமோக ஞுங்கியே
காதிலார் குழையினுய்வண் காமசுந்த ராங்கியே
கண்டதும் உண்மைக் காதல்கொண்டேனுர்வ மோங்கியே

(பல்லவித் தொடர்)

ஆதரிப்பாய்—மகிழ்ந்
தன்புடனணைந் தென்னை
ஆதரிப்பாய்.

(அனுபல்லவித் தொடர்)

ஆதரிப்பாய்—புக
ழேதரிப்பாய்—குறை
யே தவிர்ப்பாய்—மகிழ்ந்
தன்புடனணைந்தென்னை
ஆதரிப்பாய்.

*[சரணம்]*

2 தேஞர் செழுங்கமலம் சீறடிகை காந்தள்தனம்
தேங்குந் தண்கோங்கு காவித் தேறன்மலர்ப் பார்வைதினம்
காணும் வாய்சே தாம்பற் கவின்முரற் போதெவ்வினம்
கன்னிநின் வாய்திறந்து காட்டிச் செல்லுவாயென் முனம்

*[பல்லவித் தொடர்]*

சுந்தரியே—சுப
சோபனமிகுரூப
சுந்தரியே.

*[அனுபல்லவித் தொடர்]*

சுந்தரியே—குண
சுந்தரியே—காம
சுந்தரியே—சுப
சோபனமிகுரூப
சுந்தரியே.

*[சரணம்]*

3 உன்னைப் போ லிவ்வுலகில் உயர்மாதைக்
கண்டதில்லை
ஓங்கும்பொன் னுலகிலுமே உன்னை
நிகர்ப்பாருமில்லை
என்னை நீ கட்டிச்சேர இன்னுந் தாமதமேன்
தொல்லை
ஏதோவிளைக்க வேள்வளைக்கிருன தோபார்வில்லை

---

24 ஆவதுபாடல்: 19 ஆவதுவரி: கமலம், சீறடி-(உனது) சிறிய பாதம் செந்தாமரை மலர் போன்றது
,, ,, கை காந்தள்-(உனது) கரம் காந்தள் மலர் போன்றது (கார்த்திகைப் பூ)
,, ,, தனம் பயோதரம் (மார்பகம்)
,, 20 ஆவதுவரி; கோங்கு-கோங்கரும்புபோன்றது (பயோதரம்)
,, ,, காவி-நீலோற்பவமலர், கருங்
,, ,, வளைபார்வை-கண்.
,, 21 ஆவதுவரி: வாய் சேதாம்பால் உனது வாய் செவ்வல்லி மலர் போன்றது.
,, ,, கவின்முரற் போதெவ்வினம்?- உனது அழகிய பல்வரிசைக்கு எந்த மலரை ஒப்பிடுவது?

[பல்லவித் தொடர்]

பஞ்சணையில் ஏறிக்
கொஞ்சிவிளையாடுவோம்
பஞ்சணையில்.

[அனுபல்லவித் தொடர்]

பஞ்சணையில் — மோகம்
விஞ்சணையில் -- துயர்
அஞ்சணையில் — ஏறிக்
கொஞ்சிவிளையாடுவோம் பஞ்சணையில்

[சரணம்]

4 அம்புவிப் பெண்ணினத்தின் அழகுத்தெய்வ
மாமணியே!
அன்பன் இலக்குவன்சொல் ஆயிழை
சிந்தாமணியே
வெம்புமென் காதல்நோயின் விரகதாபம் நீதணியே
வேறெந்த மாதரையும் காதலியேன் நானினியே

[பல்லவித் தொடர்]

மதிவதனி — என்றன்
இதயக்கலாநிதி நீ
மதிவதனி.

[அனுபல்லவித் தொடர்]

மதிவதனி — எழில்
மதிவதனி — முழு
மதிவதனி — என்றன்
இதயக் கலாநிதி நீ (மாத) (24)

## தாய்த் தமிழ்மொழியின் பெருமைபற்றிய பாடல்.

*[இராகம் - மோகனம்-தாளம் ஆதி]*

*[பல்லவி]*

அருமைத் தமிழ்த்தாய் மக்களே - உலகிலின்பம்
அருளுந் தமிழ்த்தீஞ் சொற்களே (அரு)

*[அனுபல்லவி]*

பெருமை மேவுகடல் புடைசெறிதலம்வளர்
ஒருமையானமொழி களிலருளுடன்கிளர் (அரு)

*[சரணங்கள்]*

1 திருவாரய னிந்திரனும் - தேவர்முனிவர்
திகழ்பானு வுஞ்சந்திரனும்
கரியமாலுமறி யாதவி னேதமுக்
கணனுயிர்த்த மடந்தை - மிகக்

களைத்த அன்பர்க்குநலன்
விளைத்துத் தடமிடங்க
ரழைத்து மதலையுயிர்
தழைத்து வரவியற்றுங்

கலையின் பேரணியைக் கழறல்மிக் கரிதே
கருத்திற் சிறியசொற்கள் அருத்தமோ பெரிதே
உலகிலே பிறந்த மொழிகளி லினிதே
உயர்மணி யெழின்மிகு மொலிமிகச் சிறிதே (அரு)

2 ஈசன் தூதிடை சென்றதும் - வைகையிலிட்ட
ஏடெதிர்த் தேறி வென்றதும்
காசில் அப்பர் கடல் மீதிலே மிதந்து
கரையணைந்து நின்றதும் - செங்கற்

கண்டு சர்க்கரை மது
உண்டு களிக்குமிசை
வண்டுக் குழுவும்நாணங்
கொண்டு செலுமினிய

கம்பன் காவியத்தின் இன்பமு மறிவீர்
கனக முடித்தென்னவன் கவிச்சுவை புரிவீர்
செம்பொனுமைம் பெருங் காப்பியந் தெரிவீர்
திருக்குற ளிலக்கியத் தெளிவருள் பெறுவீர். (அரு)

3 வேறுமொழியில் ஆசையே - கொண்டுமறந்தீர்
வியன்தாய் மொழியின் ஓசையே
பாரிலுள்ளோர் நம்மை ஏசிடாரோ இந்தப்
பாவமான செயற்கே - பதம்

படிப்பீர் — மதுரப்பாலைக்
குடிப்பீர் — தமிழ்முரசை
அடிப்பீர் — இன்னிசைக்கொடி
பிடிப்பீர் அரியகலைப்

---

25. ஆவது பாடல்: 10 ஆவதுவரி: இடங்கர்- முதலை.
,, 19 ஆவதுவரி: காசில்- குற்றமில்லாத
,, 26 ஆவதுவரி: கனகமுடித்தென்னவன்கவி-நைடதம் பாடிய அதிவீர ராம பாண்டிய மன்னன் பாடல்கள்.
,, 27 ஆவதுவரி: ஐம்பெருங்காப்பியம்- சிந்தாமணி, குண்டலகேசி, சிலப்பதிகாரம், மணிமேகலை, வளையாபதி.

பாவலர் நிறைந்துநற் பணிசெய்முச் சங்கம்
பதிந்திடும் பாண்டியப் பதிகளிற் பொங்கும்
மாவளர் வேவுமா நகரி லிலங்கும்
மைந்த னிலக்குமணன் மகிழ்ந்து வணங்கும் (அரு)
(25)

——

## வாழி.

*[கலிநிலைத்துறை]*

வாழி வான் றமிழ்ப்பூம் பொழில் மலரின மணிகள்
வாழி மாமலர் மணமெலாம் நுகர்ந்திடும் மக்கள்
வாழி யிந்தநூல் உரிமைபெற் றோங்கிய வள்ளல்
வாழி வாரிசூழ் மண்டலம் உலகெலாம் மகிழ்ந்தே. (26)

பல்சுவைத் தமிழ்மலர்ப் பகுதி நிறைவு பெற்றது.

——

## தமிழ்ப் பூம் பொழில்.

| | | | |
|---|---|---|---|
| *1* | *போற்றித் தமிழ்மலர்ப் பாடல்கள்* | – | *80* |
| 2 | *வாழ்த்துத் தமிழ்மலர்ப் பாடல்கள்* | – | *139* |
| 3 | *பல்சுவைத் தமிழ்மலர்ப் பாடல்கள்* | – | *26* |
| | ஆகத் தமிழ்ப் பூம் பொழில்— பாடல்கள்– | | 245 |

[முற்றுப் பெற்றது.]

——

25 ஆவதுபாடல்: 32 ஆவதுவரி: பதம்– இசைப்பாடல்.

*[ இந்நூலாசிரியரால் இந்நூலுக்கு முன் இயற்றப் பெற்ற பன்னூல்களுள் ஒன்றுகியதும் இலக்கியச் சிறப்பமைந்ததும் ஆகிய ''பூம்புகார் ஆற்றுப்படை'' என்ற நூல் பற்றி திருச்சி வானொலி நிலையத்தார் 7- 11- 70 இரவு 9- 15 மணிக்கு வானொலிக்கண் ஒலிபரப்புமூலம் வெளியிட்ட மதிப்புரை. ]*

**நூல் மதிப்புரை:**

## ''பூம்புகார் ஆற்றுப் படை''

ஆற்றுப்படை என்பது பழமையானதொரு கவிதை மரபு. பரிசிலும் பெருமையும் பெற்ற ஒருவன், பரிசில் நாடிக் காத்திருக்கும் ஒருவனுக்குப் பரிசில் தருவோன் மாண்புகளையும், அவர் தம் நாடு, நகர் வளங்களையும் எடுத்துக்கூறி வழியனுப்புவது பொதுவாக, ஆற்றுப் படைகளின் இலக்கணமாகக் கூறப்படுகிறது.

பூம்புகாரின் பழம் பெருமையையும் அதன்கண் மன்னர் பின்னோராய்ப் புகழ் மணக்க வாழ்ந்த வணிகர் குலத்தவர் பெருமையினையும் இனிய தமிழில் பாடப்பட்டுள்ள இந்த நூலைச் செய்தவர், வேகுப்பட்டி, கவிஞர் பெரி. இலக்குமணச் செட்டியார் ஆவார்.

நேரிசை ஆசிரியப்பாவினுல் ஆனது. ஆன்பாலினும் ஆழ்கடல் அமுதினும் தேனினும் இனிக்கும் தீந் தமிழால் ஆனது. நாட்டுச் சிறப்புடன் தொடங்குகிறது நூல்.

> "பொன்னும் புகழும் பூத்துயர் நாடு
> மன்னும் மங்கல மணித்தமிழ் நாடு"
> "பூவிரி வைகை பொருநை நதியொடு
> காவிரி பாயுங் கவின்தமிழ் நாடு"
> "கானுங் கழியும் கனைகுரற் கடலின்
> மீனும் உப்பும் விளைதமிழ் நாடு"

எனத் தாய்த்திரு நாட்டின் தனிப்புகழ்பாடும் இந் நூல் "மொழிச்சிறப்பு" எனும் பகுதியில் பண்டைத் தமிழிலக்கிய இலக்கண நூல்களின் பட்டியலைப் பாங் குறத் தொகுத் துரைக்கிறது, நகரச் சிறப்பும் மகளிர் மாண்பும், சோழ மன்னர் போர்முயற்சியும், அவர் தம் தொன்மைப் பெயர்ச் சிறப்பும் பிறவும் விரிவாகக் கூறப் படுகின்றன. சங்க நூல்களின் இயல்பும் சிலப்பதிகாரம் போன்ற தெள்ளுதமிழ்க் காப்பியங்களின் ஆற்றலும் இப்பகுதிக்கு உயிர்வளம் ஊட்டுகின்றன.

"காவிரி ஆறுங் கடலுங் கலந்து
பூவளன் கொழிக்கும் புனிதப் பூம்புகார்"

வர்ணனை சிலப்பதிகாரம், புகார் காண்டத்தினை நினை வூட்டுகிறது.

அத்திருமகள் உறையும் செல்வப் பூம்புகாரில் வாழும்

"எட்டிலும் பாட்டிலும் ஈடிலாப் புகழ்கொள்
நாட்டுக் கோட்டை நகரத்தார்"

எனும் பெரும்பெயர் கொண்ட மக்களின் புகழை விரித்துப் பேசுகிறார். இயற்பகை நாயனார், காரைக்கால் அம்மையார், கற்பினள் தெய்வக் கண்ணகி, அமுதப் பட்டினத்தடிகளார், ஆகியோரைத் தமிழுலகிற்குத் தந்த பொற்குலத்தினர் என அக்குடியை புகழ்கிறார்.

அண்ணாமலை அரசர், காரைக்குடி மெய்யப்பர், பண்டிதமணி கதிரேசனார், டாக்டர் அழகப்பர், சேவு. மெய்யப்பர், மேலைச் சிவபுரிச் சன்மார்க்கசபை நிறுவியர் ஆகியோர் புகழும் துறைமுகச் சிறப்பும், அங்காடிச்

சிறப்பும் ஆகியவற்றைப் பழமை மணமும் புதுமைப் பொலிவும் பொங்கிடப் பாடுகின்ருர்.

இந் நூலாசிரியர் தம் இலக்கியப் புலமைக்கும் அழகுணர்ச்சிக்கும் எடுத்துக்காட்டாய் விளங்கும் இந் நூலுக்குப் பேராசிரியர் ஒளவை துரைசாமிப் பிள்ளை அவர்கள் முன்னுரையும், டாக்டர் வ. சுப. மாணிக்கம் அவர்கள் அணிந்துரையும் அளித்துப் பெருமைப்படுத்தி யிருக்கின்றனர்.

## "மன்னுதமிழ் மணத்தேறல்"

எனத்தகும்.

—:இந்நூல் கிடைக்குமிடம்:—

**கவிஞர் பெரி. இலக்குமணச் செட்டியார்**

வேகுப்பட்டி அஞ்சல்

(புதுக்கோட்டைப் பிரிவு)

திருச்சி மாவட்டம்

**விலை ரூ. 1-50**

——

இந்நூலாசிரியரால் இந்நூலுக்கு முன் இயற்றப்பெற்ற பன்னூல்களுள் ஒன்ருகியதும் இலக்கிய இலக்கணச் சிறப்பமைந்ததும் அண்மையில் வெளியிடப் பெற்றதுமாகிய

"உலகியல் நூலறிவுப் பாடல்கள்"

*என்ற நூல்பற்றி திருச்சி வானெலி நிலையத்தார் 1-1-1972 இரவு 9-15 மணிக்கு வானெலிக்கண் ஒலிபரப்புமூலம் வெளியிட்ட மதிப்புரை.*

## நூல் மதிப்புரை.

### உலகியல் நூலறிவுப் பாடல்கள்.

கவிஞர் பெரி. இலக்குமணச் செட்டியார் அவர்கள் யாத்தவை. திருச்சி காவேரிப் பண்ணையாரின் வெளியீடு விலை ரூ. 2.

அகராதி வகைகளுள் தொகையகராதி என்பதும் ஒன்று. இதன் ஆசிரியர் தொல்காப்பியம், சங்க இலக்கியம், பிற்கால இலக்கிய இலக்கணங்கள் உலகியல் மரபு இவற்றில் பயின்றுவரும் தொகைப் பொருள்களை எளிய தெளிய வெண்பா ஆசிரிய விருத்தம், கட்டளைக் கலித்துரைப் பாக்களாக ஆக்கி உள்ளார்.

"பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க" என வாழ்த்தினல் இதன் பொருள் புரியாத சிலர் "ஐயய்யோ! குடும்பக்கட்டுப்பாட்டுக் காலத்தில் இத்தனை வேண்டாம்" என நகைச்சுவையாகக் கூறுகின்ருர்கள் அல்லவா? 16 பேறுகள் எவையென விளக்கும் இன்னிசை வெண்பா இதோ.

நன்மக்கள் கல்விபுகழ் நல்லூழ் அறிவழகு
பொன்னுகர்ச்சி வாழ்நாள் பொறுமைநெல்
நோயின்மை
வெற்றி இளமை துணிவுவலி ஆம்பேறு
பற்றியஈ ரெட்டுப் பதம்.

"செப்புமொழி பதினெட்டுடையாள் எனிற் சிந்தனை யொன்றுடையாள்" எனப் பாரதியார் குறித்த 18 மொழிகள் இவையெனக் கூறும் பாடல் –

அங்கம் சோனகம் திரவிடம் துளுவம்
அருணம் பப்பரம்நீள்
கொங்கணம் சீனம் சாவக மகதம்
கோசலம் காம்போசம்
சிங்களம் அரியக லிங்கம் மராடம்
சிந்து கௌசிகமாம்
வங்கம் பதினெண் மொழிகள் நிலவும்
வளநா டிவையாமால்.

இன்னும் ஆண்பால் பெண்பால் பிள்ளைத் தமிழுக்குரிய 10 பருவங்கள் அவற்றிற்குரிய வயது பெண்களின் ஏழு பருவங்கள் முதலிய இலக்கிய இலக்கண நுண் பொருள்களைத் தொகுத்துக் கூறுவர். சமய தத்துவக் கருத்துக்களும், இலக்குமணச் செட்டியாரின் இவ்வினிய பாடல்களில் இடம்பெறுகின்றன. மொத்தத்தில் இந்நூல் ஒருமுறை படித்துவிட்டுப் போட்டுவிடும் அன்றாட நூலாக இல்லாமல் என்றுமுள நூலாக—வேண்டும் போதெல்லாம் எடுத்துப்பார்க்க உய்ய—நூலகப் பேழையிலே வைத்துப் போற்றக்கூடிய நூலாகும்.

——

# பிழையும் திருத்தமும்.

| பக்கம் எண் | பாடல் எண் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 5 | 12 | உரை நடை வரி 3 | பாடல்கவ் | பாடல்கள் |
| 36 | 70 | 3 | ——— | (பழ) |
| 59 | 26 | 3 | நீடுழி | நீடூழி |
| 72 | 55 | அரும்பத உரை | 54 | 55 |
| 74 | 59 | 2 | மன்ஞதின் | மன்ஞநின் |
| 77 | 67 | 2 | கிருட்டினப் பொற் | கிருட்டிணப் பொற் |
| 84 | 81 | 1 | வள்ளலின் | வள்ளலின |
| 110 | 134 | 4 | அழுக்கல் நாள் | அழுக்ககல் நாள் |
| 126 | 14 | மூன்ருவதுவரிக்குமேல் | பல்லவிச் தொடர் | பல்லவித் தொடர் |
| 131 | 16 | 1 | பரர் மதுரா | பார் மதுரா |
| 134 | 17 | 22 | வல்வணை | வல்வினை |
| 137 | 19 | 17 ஆவது வரிக்குமேல் | மோசுனம் | மோகனம் |
| 140 | 21 | 19 | பைத்தமிழ் | பைந்தமிழ் |
| 152 | நூல் மதிப்புரை | 19 | கலித்துரை | கலித்துறை |
| 16 | 36 | 1 ஆவது வரிக்கு மேல் | நேரிசை வெண்டா | நேரிசை வெண்பா |